**'மிதுன்' மூனு வயசுப் பையன். ரொம்ப வால். ஒருநாள் சாயங்காலம் காணாமற் போனான்......**

சொல்வது ரமேஷ்:

மிதுன் என் பெரிய அக்கா உஷாவின் பையன். அன்றைக்கு என் இன்னொரு அக்கா வீணா, மாம்பலத்துக்கு ஆட்டோவில் போனாள். போகும்போது மிதுன் தானும் வருவதாய் அடம் பிடிக்க, "வீட்டிலேயே சமர்த்தாக இருந்தால், ஜெம்ஸ் வாங்கிண்டு வருவேன்" என்றதும், "சரி!" என்றான். காம்பௌண்டிற்குள்ளேயே அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தான். நாங்கள் வீட்டுக்குள்ளே இருந்தோம். மணி இரவு ஏழாகியிருக்கும். பார்த்தால், மிதுனைக் காணோம்! எல்லாருமாய்ச் சேர்ந்து சல்லடை போட்டுச் சலித்தும் அகப்படவில்லை. சைதாப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனுக்குப் புகார் கொடுக்கப் போனால், "இன்னும் நல்லாத் தேடிப் பார்த்து விட்டு, இரண்டு மணி நேரம் கழித்து வாருங்கள்" என்று சொல்லி விட்டனர்! மறுபடியும் தேட ஆரம்பித்தோம்.

உண்மையில் மிதுன் எங்கே போனான்? வீட்டை விட்டுக் கிளம்பி, தெருக் கோடி வரை வந்து, திரும்பி, நந்தனம் செமியர்ஸ் ரோடை அடைந்திருக்கிறான். அப்போது 12 — சி பஸ் வந்திருக்கிறது. கும்பலோடு கும்பலாய் பஸ்ஸினுள் ஏறிவிட்டான்! அப்புறம்?

கண்டக்டர் ஜெயராமன் சொல்கிறார்:

நந்தனத்தில் ஒரு குடும்பம் பஸ் ஏறின போதே இந்தப் பையனையும் கவனித்தேன்; அவனும் அவர்கள் வீட்டுக் குழந்தை போல இருக்கிறது என்று நினைத்துக் கொண்டேன். பிறகுதான் தெரிந்தது பையன் தனியே பஸ் ஏறி இருக்கிறான் என்று. தன் பெயர், ஸ்கூல், அப்பா பெயர் எல்லாம் சொன்னான். அட்ரஸ் சொல்லத் தெரியவில்லை. பஸ் வடபழனி டெப்போவை அடைந்தது. டெப்போவில் விஷயத்தைச் சொன்னேன். பிறகு, எதற்கும் இன்னொரு டிரிப் நம் கூடவே பஸ்ஸில் அழைத்துக் கொண்டு போகலாம்; பையனின் அப்பா, அம்மா வந்து கேட்டால் கொடுக்கலாம் என்கிற நம்பிக்கையில் புறப்பட்டேன். பையன் அழ ஆரம்பித்தான். பால், பிஸ்கட்டெல்லாம் வாங்கிக் கொடுத்தேன். பஸ்ஸிலேயே தூங்க ஆரம்பித்தான். பயணிகளில் யாருக்கும் அவனைத் தெரியவில்லை.

வீணா சொல்கிறார்:

நாங்கள் பாண்டி பஜாரில் ஷாப்பிங் முடித்துக் கொண்டு, வீடு திரும்ப பஸ்ஸுக்குக் (12 சி) காத்திருந்தோம்., பஸ்ஸில் ஏறி நந்தனத்துக்கு டிக்கெட் கேட்டதும் கண்டக்டர், "டிரைவர் சீட்கிட்டே ஒரு பையன் இருக்கான். உங்களுக்கு அடையாளம் தெரியுமா பாருங்க!" என்றார். பார்த்தால், மிதுன்!

ஆச்சரியம்! அதிர்ச்சி! "எப்படிடா வந்தே?" என்றால், "மிதுன் தானே டாட்டா போச்சு!" என்றான்!

கண்டக்டருக்கு நாங்கள் எப்படி நன்றி சொல்வது என்றே தெரியவில்லை!

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

படம்: **யோகா**

# "மிதுன் தானே டாட்டா போச்சு!"



• மிதுன்



* ஜெயராமன்





பம்பாயில் ஒரு குறுகலான சாலையில் என்னை அழைத்துப் போன நண்பர் காரை நிறுத்தஇடம்அகப்படாமல்தவியாய்த்தவித்த வட்டாரத்தில், ஒருவர் மீது ஒருவர் இடித்துக் கொள்ளாமல் நடைபாதையில் நடக்க முடியாது என்ற அளவுக்கு நெரிசல் மிகுந்த பகுதியில் இருக்கிறது 'பாம்பே ஹவுஸ்.' இந்தக் கட்டிடத்தில் நுழைந்து லிஃப்ட் ஏறி மூன்றாவது மாடிக்குப் போகிறேன். ஒரு கதவு இறந்து வழி விடுகிறது. உள்ளே நுழைகிறேன். போர்ட் ரூம்!

'டாடா நிறுவனங்களின் டைரக்டர்கள் இந்தக் கூடத்தில்தான், இந்த நீண்ட மேஜையைச் சுற்றிப் போடப்பட்டுள்ள (சிம்)மாசனங்களில் அமர்ந்துதான், ஜே. ஆர். டி. டாடாவின் தலைமையில் விவாதிக்கிறார்கள். இதற்குப் பல லட்சம், அதற்குச் சில கோடி என்று நிதி ஒதுக்குகிறார்கள். பிரச்னைகளை அலசி தீர்வு காண்கிறார்கள். இப்போது அந்தக் கூடம் அம்போ என்று காலியாக இருக்கிறது. டைரக்டர் நாற்காலி ஒன்றில் உட்கார்ந்து கொள்கிறேன். வசதியாகத்தான் இருக்கிறது. நன்கு சாய்ந்து கொள்கிறேன். கால் மேல் கால் போட்டுக் கொண்டு முழங்கை ஊன்றிப் புறங்கையில் முகவாயைப் பதித்து... இதர டைரக்டர்களைக் கற்பனையில் கண்டு அவர்களுடன் கருத்துப் பரிமாற்றம்செய்ய ஆரம்பிக்கிறேன். அடர்ந்த தாடியுடன் ஜம்ஷெட்ஜி டாடாவின் சிலை, 'இதற்கெல்லாம் அஸ்திவாரம் போட்டது நானாக்கும்' என்று சொல்லாமல் சொல்லியபடி கம்பீரமாக நிமிர்ந்து நிற்கிறது. இன்னும் ஓரிரு நிமிஷம் கிடைத்திருந்தால் சேர்மன் சொற்பொழிவை தானே நிகழ்த்தி, சில பல நிறுவனங்களின் பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட்டை வாரி வழங்கியுமிருப்பேன்! ஆனால் அதற்குள் ஜே. ஆர். டி. டாடா, பயந்து போய்த்தானோ என்னவோ கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்து விட்டார்! கைகுலுக்கிவிட்டுத் தலைமைப் பீடத்தில் அமர்ந்து என்னை நெருங்கி வருமாறு கேட்டுக் கொண்டார். அவருக்கு அருகே பக்கத்து நாற்காலியில் நான் அமர்வதற்கு முன்னதாகவே, "பத்திரிகையாளரை நான் அதிகம் சந்திப்பதேயில்லை. பேட்டி என்றாலே யோசனையாக, தயக்கமாக இருக்கிறது... நான் கூறுவதையெல்லாம் கற்பனையாக எழுதுவதைக் கூட மன்னித்து விடலாம்; ஆனால் ஒரு பத்திரிகையாளரை மதித்து, நண்பராக ஏற்று, 'நான் இவற்றைப் பிரசுரத்துக்காகக் கூறவில்லை, உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன்' என்று கூறி மனம்விட்டுப் பேசுவதையெல்லாம் எழுதி விடுகிறார்களே, நியாயமா?"

யாரை, எந்தப் பத்திரிகையை அவர் மனத்தில் வைத்துக் கொண்டு பேசுகிறார் என்பது தெளிவாகவே புரிந்ததால், "பத்திரிகைகளுக்கிடையே போட்டா போட்டி... பரபரப்பான செய்திகளைத் தரும் ஆவல்..." என்று நான் இழுக்க...

"அதற்காகப் பத்திரிகை தர்மத்தை ஒதுக்கி விடுவதா? எனக்கு இதெல்லாம் புதிதாக இருக்கிறது. தேசிய நீரோட்டத்தில் வந்த என் போன்றவர்களுக்கு வாக்குறுதிகள் மீற முடியாதவை. மோதிலால் நேரு, மகாத்மா காந்தி, ஸி. எஃப். (தீனபந்து) ஆண்ட்ரூஸ் போன்றவர்களுக்கு நெருக்கமாக இருந்தார்

# ஜெ.ஆர்.டி. டாடா: சிறைக்குப் போகாத தேசபக்தர்!

ஜம்ஷெட்ஜி. தேச விடுதலைக்கு அவர்கள் பாடுபடுவது எவ்வளவு முக்கியமோ அவ்வளவுக்கு இந்நாட்டின் பொருளாதார விடுதலைக்குத் தன்னைப் போன்றவர்கள் பாடுபடுவது முக்கியம் என்று கருதினார்...''

''அடுத்த தலைமுறையினரான நீங்களும் நேருஜிக்கு மிகவும் நெருங்கியவராக இருந்தீர்கள் அல்லவா?''

''ஆமாம்; ஆனால் அவரது கொள்கைகள், எண்ணங்கள் எல்லாம் சோஷலிஸ மார்க்கத்தில் சென்றன. அது தேசத்தின் துரித முன்னேற்றத்துக்கு உதவாது என்று எனது இளம் உள்ளம் உணர்ந்தது. இதனால் எங்களிடையே நட்பு பாதிக்கப்படவில்லை. நாங்கள் மிக நெருங்கியிருந்தோம்; மிக விலகியும் இருந்தோம்.''

''சிறைக்குப் போவது மட்டும் தேச பக்தியில்லை; தேசப் பொருளாதாரத்தின் மேம்பாட்டுக்கு உதவுவதும் தேச பக்திதான் என்று ஜம்ஷெட்ஜி போல நீங்களும் கருதி, இந்த டாடா தொழில் வர்த்தக சாம்ராஜ்யத்தை மேன்மேலும் விஸ்தரித்திருக்கிறீர்கள். உங்கள் சாதனைகளிலேயே மிகவும் முக்கியமானது என்று எதைக் கூறுவீர்கள்?''

''ஒன்றல்ல; இரண்டு அம்சங்களைக் கூற விரும்புகிறேன். முதலாவது ஏர் இந்தியா. அது என் செல்லக் குழந்தை. நானே ஒரு பைலட் ஆனதால் எனக்கு அதில் விசேஷ ஈடுபாடு ஏற்பட்டது. ஒரு சிறிய நிறுவனத்தை ஏற்று, சர்வதேச நிறுவனமாக உருமாற்றி, அதற்கு உலகளாவிய செல்வாக்கும் குறைவற்ற செல்வமும் தேடித் தந்தேன். மற்றபடி எஃகு ஆலைகள், இதர பல தொழிலகங்கள் எல்லாம் வளர்ச்சியுற்றிருக்கலாம்; ஆனால் என்னால்தான் வளர்ந்தன என்று கூற மாட்டேன்.''

''இரண்டாவது அம்சமாக நீங்கள் குறிப்பிட விரும்புவது...'' என்று நினைவூட்டினேன்.

''ஜெம்ஷெட்பூர் எஃகு ஆலைத் தொழிலாளர்களுடன் நிர்வாகத்துக்கு ஏற்பட்டுள்ள நல்லுறவு. 40,000 பேர் பணியாற்றும் இடம் அது. அவர்கள் எல்லோருக்கும் தாங்கள் செய்கிற காரியங்களில் பெருமித உணர்வு ஏற்பட்டிருக்கிறது. அந்தத் தொழிலாளர் — நிர்வாக நல்லுறவு ஒரு உலக மகா அற்புதம். அங்கே போய் இருந்து பார்த்து அனுபவித்தால்தான் அதன் மகிமை புரியும்.''

''மற்ற நிறுவனங்கள் வளர்ச்சி அடைந்திருக்கலாம்; ஆனால் என்னால்தான் வளர்ந்தன என்று கூற மாட்டேன் என்று சற்றுமுன் சொன்னீர்கள். இன்று டாடா நிறுவனங்களில் ஆண்டுதோறும் 4000 கோடி ரூபாய் புரள்கிறது. இந்த அளவுக்கு வளர்ச்சிக்கு நீங்கள் காரணமில்லையென்றால் வேறு யார் காரணம்? எப்படி நிர்வகிக்கிறீர்கள்?''

''எனக்கு முறையான கல்வி அறிவு பெறவில்லையே என்ற வருத்தம் நிறைய உண்டு. அதனால் பட்டதாரிகளை, அறிவாற்றல் மிக்கவர்களை, நிர்வாகத் துறையில் விசேஷத் தேர்ச்சி பெற்றவர்களைத் தேர்ந்தெடுத்து நியமிக்கிறேன். பொறுப்புக்களை ஒப்படைக்கிறேன். சுதந்திரமாக, இயங்க அனுமதிக்கிறேன். அவ்வப்போது எழும் பெரிய பிரச்னைகளை, எடுக்கப்படும் முக்கியமான முடிவுகளை மட்டும் என் கவனத்துக்குக் கொண்டு வரச் சொல்கிறேன்.''

''இந்த நடைமுறை நல்ல பலனைத்தானே தந்திருக்கிறது. முறையான கல்வி பெறாததால் என்ன குறைந்து போய் விட்டது?''

''குறை என்றில்லை ஆனால் ஓர் இன்ஜினியரிங் நிறுவனத்தை நடத்தும் நாம் ஓர் இன்ஜினியராக இல்லையே என்று தோன்றும். அதை ஈடுகட்டத்தான் அறிவாளிகளை அமர்த்திக் கொள்கிறேன்.''

''ஏர் இந்தியாவை உங்கள் குழந்தை என்று அன்போடு குறிப்பிட்டீர்கள். அதற்குக் கல்யாணமாகப் போகிறதாமே? இந்தியன் ஏர்லைன்ஸுக்குத் தாலி கட்டப் போகிறதாமே? இந்த இரண்டையும் இணைத்து ஒரே நிறுவனமாக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறதே?''

''இது ரொம்ப துரதிர்ஷ்டவசமான முடிவு. இந்தத் திருமணம் வெற்றி பெறாது. புதிய மிகப் பெரிய பிரச்னைகள் தோன்றும். ஏகபோக்கிய நிலை காரணமாகச் செயல் திறன் குறையும். இன்று ஏர் இந்தியா பல்வேறு சர்வதேச விமான நிறுவனங்களோடு போட்டியிட வேண்டிய நிலையில் உள்ளது. இந்தியன் ஏர்லைன்ஸ் ஓர் ஏகபோக்கியமாக உள்ளது. இணைந்து விட்டால் தரத்தில் இரண்டுமே நலிவுறும். சில பொதுவான விமான நிலைய வசதிகளை இரு சாராரும் பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கலாம்; அவ்வளவு

நான். அதோடு நிற்க வேண்டும்.''

''நீங்கள் பல காலமாகவே பர்மிட் — லைசென்ஸ் ஆட்சியையும் நமது நாட்டுக்கே உரிய பிரத்தியேகமான ஜனநாயக சோஷலிஸ பாணியையும் குறை கூறிக் கண்டித்து வந்திருக்கிறீர்கள். இன்றைய மத்திய அரசின் கொள்கைகள் எப்படி? மாறுதல்கள் தெரிகிறதல்லவா?''

''மாறுதல்கள் இருக்கத்தான் செய்கின்றன. நல்ல திசையில் நல்லதுக்கு ஏற்பட்ட திருப்பம் என்றும் கூறலாம். ஆனால் போதிய அளவு மாறுதல்கள் ஏற்படவில்லை. பர்மிட் லைசென்ஸுகள் சில இனங்களில் நீக்கப்பட்டுள்ளதும் வரிகள் பல இனங்களில் குறைக்கப்பட்டுள்ளதும் வரவேற்கப்பட வேண்டியவை. ஆனால் நிர்வாகக் கட்டுப்பாடுகள் இன்னமும் கைகால்களைக் கட்டிப் போட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. இதை நான் தனியார் துறைக்காக மட்டும் கூறவில்லை. அரசுத் துறை நிறுவனங்களுக்காகவும் பரிந்துரைக்கிறேன். அவையும் இதனால் பாதிக்கப்பட்டுள்ளன. இதற்குப் பரிகாரம் காண்பதுடன் அரசுத் துறை நிறுவனங்களின் தலைமைப் பதவியை அடிக்கடி மாற்றாமல் நீண்ட கால அவகாசம் தந்து அதற்குள் சாதனை புரிந்து காட்டுமாறு இலக்கு நிர்ணயிக்க வேண்டும். அத்தலைவர்கள் பூரண சுதந்திரத்துடன் இயங்க அனுமதிக்கப்பட வேண்டும். இன்று பாரதம் முன்னேற தனியார் துறையின் செயல் திறன் மட்டும் போதவே போதாது. அரசுத்துறை மிகப் பெரிதாக வளர்ந்து விட்டது. தேசப் பொருளாதாரத்தின் ஏற்ற இறக்கங்களில் மிக முக்கியமான பங்கு வகிக்கிறது.''

''இன்றைய எதிர்க்கட்சி அரசியல்வாதிகளில் உங்களை வெகுவாகக் கவர்பவர் யார்?''

''ஹெக்டே. அவர் நேர்மையாளராகவும் சுதந்திர சிந்தனையுள்ளவராகவும் செயல் திறனும் புத்திசாலித்தனமும் உள்ளவராகவும் விளங்குகிறார். ஆனால் அவரால் கூடப் பிரமாதமாக ஏதும் சாதித்து விட முடியாததற்குக் காரணம் பொருளாதார



*The Indian Institute of Science, Bangalore*




# பாப்பா வளர்ச்சிக்கான திட உணவுகளில் பாசத்தாய் அளிக்கும் முதலிடம் ஃபாரெக்ஸ்®

தாய், தன் குழந்தைக்கு தேர்ந்தெடுக்கும் முதலான திட உணவு புதிய செழுமையான ஃபாரெக்ஸ். காரணம்:

பாப்பாவின் உடல் நலத்திற்கான புரதமும், ஜீரணத்திற்கு உகந்த கொழுப்புச் சத்தும் சரியான அளவில் கொண்டது.

பாப்பாவுக்கு ஆரோக்கியமான ரத்தத்தை தரவல்ல இரும்புச் சத்துள்ளது.

எலும்பும் பற்களும் வலுவோடு வளர்ந்திட கால்சியமும் ஃபாஸ்ஃபரஸும் 2:1 என்ற அளவில் சேர்க்கப்பட்டது.

தின்னத் தெவிட்டாதது; கலப்பதும் கொடுப்பதும் எளிது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலக்கு கொடுத்தாலே போதும்.

## தாயன்பைக் கூறிடும் தரமிக்க திட உணவு ஃபாரெக்ஸ்®

CLARION/B/GX/15/203

அதிகாரம் முழுவதும் மத்திய அரசிடம் குவிந்து கிடப்பதுதான். நமது அரசியல் சாசனத்தை ஆரம்பத்தில் வகுத்தவர்கள் இப்படிப்பட்ட நிலையை எண்ணிக் கூடப் பார்க்கவில்லை. ஆனால் நாளடைவில் படிப்படியாக அதிகாரங்கள் மத்திய அரசுக்கு மாற்றப்பட்டுவிட்டன. இன்று ஒருவர் கான்வாஸ் ஷூ தயாரிக்க வேண்டுமென்றால் கூட மத்திய அரசைத்தான் அணுக வேண்டும்!''

இது உண்மையாக இருந்தாலும் கூட மத்திய அரசு இன்று பல சலுகைகளை அறிவித்துள்ளது என்பதை மறுக்க முடியாது. இதன் எதிரொலியாகத் தொழில் துறை என்ன செய்திருக்கிறது? தகுதியான விதத்தில் நடந்து கொண்டிருக்கிறதா?''

''ஏன் இல்லை? சலுகைகளைப் பெற்றுக் கொண்ட தொழில் துறை, எதிர்பார்த்த அளவில் முன்னேற்ற ஆர்வம் காட்டவில்லை என்று கூறப்படுவதை நான் ஏற்கவில்லை. நாளிதழ்களைச் சற்று ஆராய்ந்தால் தெரியும். ராஜீவ்— ஆட்சிக்கு முன்னதாக புதிய தொழிலகங்கள் அல்லது விஸ்தரிப்புத் திட்டங்களுக்கு முதலீடு கோரி வரும் விளம்பரங்கள் மிக் குறைவாகவே இருந்தன. இன்றோ, தினம் ஒரு விளம்பரம் வருவது மட்டுமல்ல, மிகப் பெரும்பாலான நிறுவனங்கள் கோரிய அளவைவிட அதிகமாகவே முதலீட்டைப் பெறுகின்றன; அதிகப்படியைத் திருப்பி அனுப்புகின்றன. இதிலிருந்தே தொழில் வளம் பெருக நல்ல சூழ்நிலை உருவாகி வருவது புரியவில்லையா? இதே திசையில் அரசு மேலும் வெகு தூரம் செல்ல வேண்டியதிருக்கிறது.''

''தமிழ் நாட்டுக்கு எப்போது வரப் போகிறீர்கள்?''

''ஏற்கெனவே வந்துவிட்டேனே! தமிழக அரசுடன் கூட்டுத் துறையில் கைக்கடிகாரங்கள் செய்யப் போகிறோம்!''

''எத்தனையோ ஆயிரக்கணக்கானவர்களுக்கு வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தி அத்தனை குடும்பங்களை வாழ வைத்தபோதிலும் டாடா— பிர்லா என்றதுமே மக்களிடம் ஓர் எதிர்ப்புணர்வு ஏற்படுகிறதே?''

''பெரும் பணக்காரர்கள் என்ற எண்ணம் ஒரு காரணமாயிருக்கலாம். ஒரு வேடிக்கை என்னவென்றால் பல டாடா நிறுவனங்களில் நாங்கள் பெரும்பான்மைப் பங்குதாரர்கள் கூட இல்லை. சிறந்த நிர்வாகத்திறனை அளித்து வெற்றி பெறச் செய்கிறோம். அவ்வளவுதான். அதை நம்பி பங்குதாரர்கள் முதலீடு செய்கிறார்கள். இன்னொன்று, டாடா அறக் கட்டளைகள் மூலம் நடந்து வரும் பல முக்கியப் பணிகள் மக்களுக்குத் தெரிய வராதது காரணமாயிருக்கலாம். எட்டு அறக் கட்டளைகள் செயல்படுகின்றன. இவற்றில் முதலாவதான ஜம்ஷெட்ஜி டாடா அறக் கட்டளையே இதுவரை ஒரு கோடிக்கு மேல் பட்டுவாடா செய்திருக்கிறது. ஆனால் ஒரு கோடி என்பது இந்த நாளில் பெரிய விஷயமா என்ன?''



''இந்தியாவின் ஏற்றுமதி வர்த்தகம் ஏமாற்றமளிக்கிறதே?''

''கவலையும் அளிக்கிறது. ஜப்பானின் ஏற்றுமதி சமீபத்தில் இரட்டிப்பாகியுள்ளது. கொரியாவின் ஏற்றுமதிப் பொருள்கள் தரத்தில் உயர்ந்தும் விலையில் மலிந்தும் உள்ளன. இந்தியாவில் உற்பத்தியாகும் பொருள்களின் விலை நாளுக்கு நாள் உயர்வதால் ஏற்றுமதி வர்த்தகம் திணறுகிறது. உற்பத்திச் செலவு உயரக் காரணம் ஒருவர் செய்ய வேண்டிய வேலையை நால்வர் செய்வதுதான். மக்கட் தொகைப் பெருக்கம் வேலையில்லாத் திண்டாட்டம் காரணமாக உருவான நிலை இது. என்றாலும் நம்பிக்கை இழக்க வேண்டியதில்லை.

''உங்களை எதிர்காலம் எப்படி நினைவு கூர வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?''

'''தனக்கிருந்த ஆற்றல் முழுவதையும் பயன்படுத்திக் கடுமையாக உழைத்த ஒரு நேர்மையான இந்தியன்' என்று பெயர் வாங்கினால் போதும்.''

பேட்டி: **கி. ராஜேந்திரன்**

சித்திரங்கள்: **மரியோ**



ஹிந்தி திணிக்கப் படமாட்டாது!
ஹிந்தி திணிக்கப்பட மாட்டாது! நேருவின் உறுதிமொழி காப்பாற்றப்படும்!
ஹிந்தி திணிக்கப்பட மாட்டாது! இந்திராவின் உறுதிமொழி காப்பாற்றப்படும்!
ஹிந்தி திணிக்கப்படாது! ராஜீவின் உறுதிமொழி காப்பாற்றப்படும்!
தேர்தல் பயம்
ராகுல் காந்தி
ஹிந்தி வாலா
ஹிந்தி திணிக்கப்பட மாட்டாதுன்னு சொல்லிக்கிட்டே திணிக்கிறது தான் ரொம்ப வசதி!
அக்டோபர்
21
தமிழக மந்திரி சபை மாறுதல்
இந்தப் புலியைப் பூனை மாதிரி பழக்கிடலாம்!
ஐயோ! புலி! புலி!
பூட்டா சிங்

கல்கி

1986 அக்டோபர் 26
மலர் 45 இதழ் 13
அக்ஷய ஐப்பசி 9



# கடவுளையே காப்பாற்றும் தமிழக அரசு!

**பொது**வாக மதத்தலைவர்களோ மடாதிபதிகளோ அரசியலில் புக அவசியமில்லை என்பதாகக் கருதப்படுகிறது. இது நியாயமே. ஆனால் அரசியல்வாதிகள் மக்களுடைய மத உணர்வுகளுடன் விளையாடும் போது மதத் தலைவர்கள் தங்கள் குரலை உயர்த்தி, அரசியல்வாதிகளைத் தட்டிக் கேட்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாகிறார்கள். இந்த முறையில்தான் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகளும் மனம்விட்டுப் பேசியிருக்கிறார்.

அ. இ. அ. தி. மு. க. அரசு கோவில் நிர்வாகத்தில் அளவுக்கு மீறித் தலையிடுகிறது என்பது சில காலமாகவே கூறப்பட்டு வரும் குற்றச்சாட்டு. ஏராளமான கோயில்களில் அறங்காவலர்களை அனுப்பிவிட்டு அவ்விடத்தில் தங்களுக்கு வேண்டப்பட்ட தக்கார்களை நியமித்து வந்துள்ளது அ. தி. மு. க. அரசு. இதனால் கோயில் சொத்துக்களுக்குப் பாதுகாப்புக் குறைந்து வந்திருக்கிறது. அறங்காவலர் குழு என்று இருந்தால் ஒருவர் குற்றம் செய்ய முற்பட்டாலும் மற்றவர்கள் விழிப்புடன் இருந்து தட்டிக் கேட்பார்கள் என்று எதிர்பார்க்கலாம். ஆனால் தக்கார் எனில் ஏகபோக்கியம்தான், எதேச்சாதிகாரம்தான். பெரிய கோவில்களில் உபரி வருமானம் இருந்தால் அதனை வருவாய் குறைந்த கோயில்களுக்கு ஒதுக்கி, அவற்றைச் செப்பனிட்டுப் பாதுகாக்கவும் பூஜை உற்சவாதிகளை நடத்தவும் பயன்படுத்த வேண்டும். ஆனால் கோயில் வருமானத்தைச் சரியாகக் கிடைக்கச் செய்யாதது ஒருபுறமிருக்க, உபரி வருவாயைச் சத்துணவுத் திட்டம் போன்ற இனங்களுக்குத் திசை திருப்பிவிடவும் அ. தி. மு. க. அரசு தயங்கவில்லை. இவையெல்லாம் விதிமுறைகளுக்குப் புறம்பான செயல்களே.

போதாக்குறைக்குச் சமீபத்தில் கோவில் சிலைகளைப் பாதுகாப்பதாகக் கூறிக் கொண்டு, பெரிய மையங்களில், சுற்று வட்டாரக் கோயில்களில் உள்ள உற்சவ மூர்த்தங்களையெல்லாம் கொண்டு வந்து வைத்துக் கண்காட்சி நடத்துகிறது தமிழக அரசு. இதனால் அந்த உற்சவர்களைப் பிரிந்து நிற்கும் கோயில்களில் நித்திய வழிபாடுகள் கூட முறைப்படி நடக்க முடியாமல் தடை ஏற்படுகிறது. கோயில்களுக்கும் மூர்த்தங்களுக்கும் புனிதத் தன்மை குறைகிறது. பாதுகாப்புப் பெட்டகங்களில் அந்த உற்சவர்கள் பூஜையின்றி வைக்கப்படுவது மிகவும் வருந்தத் தக்கது.

''கடவுள்தான் நம்மைக் காப்பாற்றுவார் என்று கூறிக் கொண்டிருக்கிறோம்; அ.தி.மு.க. அரசோ கடவுளையே காப்பாற்றுகிறேன்' என்கிறது!'' என்பதாகப் பாதி வேதனையுடனும் பாதி வேடிக்கையாகவும் கூறியுள்ளார் ஜெயேந்திரர்.

கோயில் சிலைகள் திருட்டுப் போகின்றன என்றால் காரணம் என்ன என்று கண்டுபிடித்து அப்படி திருட்டுப் போகாதிருக்கத் தக்க பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமே தவிர எல்லா விக்கிரகங்களையும் மையமான இடத்தில் கொண்டு போய் வைத்துப் பாதுகாக்கிறேன் என்று கூற ஓர் அரசாங்கம் எதற்கு? வீட்டுக்கு வீடு மக்கள் அவரவர் வசதிக்கேற்ப நகைகளை வைத்திருக்கிறார்கள். திருட்டுப் போய் விடும் என்று அரசு பாதுகாப்புப் பெட்டகம் திறந்து அதில் கொண்டு வந்து வைக்கச் சொல்லுமா? 'ஒரேயிடத்தில் எல்லா விக்கிரகங்களும் இருக்கும் போதுதான் திருட்டுப் போவதற்கான சாத்தியக் கூறுகள் அதிகம்' என்று ஜெயேந்திரர் கூறியிருப்பது மறுக்க முடியாத வாதம்.

மதங்களைப் படிப்படியாக அழிப்பதுதான் மதச்சார்பின்மை எனில் அந்தச் சாதனையை மத்திய அரசும் மாநில அரசும் கைகோத்துக் கொண்டு செவ்வனே செய்து வருவதாகக் கருதலாம். இதையெல்லாம் பார்க்கும்போது, ''அறநிலையத் துறையை நீக்கிவிட்டு, மடாதிபதிகள், ஆதீன கர்த்தாக்கள் அடங்கிய, கோயில்களின் பாதுகாப்புக்கான சுயாதிக்க வாரியம் ஏற்படுத்த வேண்டும் என்ற தமிழ்நாடு காமராஜ் காங்கிரஸ் கட்சியின் வேண்டுகோள் அதிமுக்கியத்துவம் பெறுகிறது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

## இளைய தலைமுறையின் அலங்காரம்: ஐயய்யோ அசிங்கம்:

### முதல் பரிசு வாதம்

**வாசகர் தீர்ப்பு**

| இளைய தலைமுறையின் அலங்காரம்: | |
|---|---|
| அடடா அற்புதம் | 35.45% |
| ஐயய்யோ அசிங்கம் | 64.55% |

# இளைய தலைமுறையின்

தற்கால இளைஞர் சமுதாயத்தின் அலங்காரம் உண்மையிலேயே அருவருப்பைத் தருகிறது. பெண்களும், ஆண்களும் ஃபாஷன், மாறுதல் என்ற பெயரில் உடற்கவர்ச்சியை மிகைப்படுத்திக் காட்டுவதிலேயே இருக்கிறார்கள். உடலை இறுக்கிப் பிடிக்கும் பாண்ட்; இடுப்புக்கு மேல் கவர்ச்சிகரமான ஜாக்கெட், ஆண்களை 'பார் பார்' என்று தூண்டுகிற மாதிரி தோற்றம். ஆண்களோ, நாங்களும் சளைத்தவர்களில்லை என்று டைட்டாக பாண்ட் மார்பு திறந்த ஷர்ட், தொங்கு மீசை, வேண்டாத ஒரு தாடி; சிக்குப் பிடித்த 'கோழி சிலும்பலான தலை முடி, போதாக் குறைக்குப் பாதி சாயம் போன கலரில் டைட் ஜீன்ஸ்! நாகரிகம் என்ற பெயரில் அலங்கோலம் பண்ணிக் கொண்டு, ஒருவரைப் பார்த்து ஒருவர் காப்பி அடிக்க, ஒரு சிலரால், பலரும் மாறுகிறார்கள்.

ஒழுக்கக் குறைவும், மனப்போராட்டங்களும் அதிகரிப்பதற்குத் தோற்றமும் முதல் காரணம். தோற்றம் கண்ணியமாக இருந்தால் நம் மீது நமக்கும் மரியாதை; எதிரியும் நம்மிடம் மரியாதை காட்டுவார். தோற்றமே மற்றவர்களை எடுத்தெறிவது போல் இருக்குமானால் மரியாதை என்பதற்கே இடமின்றி போகிறது. ஒருவித வக்கிரபுத்தி வளர்ந்து விடுகிறது. நம் மனத்திலும், பிறர் மனத்திலும் நல் உணர்வுகள் வளர, தோற்றமும் மிக முக்கிய காரணம் என்பதை இளைய தலைமுறை மறந்தே விட்டது!

ஃபாஷன் என்ற பெயரில் அலங்கோல உடையணியும் பெண்கள் என்ன சொல்கிறார்கள்? தாவணியும் புடைவையும்தான் 'செக்ஸி' என்கிறார்கள். உங்கள் பெண்ணையோ, தங்கையையோ தாவணியில் ஒரு புகைப்படமும் மிடி அல்லது ஃபாஷன் உடையில் ஒன்றும் எடுத்து ஒப்பிட்டுப் பாருங்கள். எது கண்ணியமான கவர்ச்சி என்பது புரியும். இந்த ஃபாஷன் சிக்கல் கண்ணைக் குத்துகிற கவர்ச்சியைத்தான் வளர்த்து வருகிறது. சூரிதார் கண்ணியமானதொரு உடை என்றாலும் அதையும் மேலாக்கின்றி அணிகிறார்கள். மேலாக்கு இருந்தால் கூட மார்புக்கு மேற்புறம் போட்டுக் கொள்கிறார்கள்! இதற்கெல்லாம் செலவாகும் பணத்தைப் பற்றியோ சொல்லவே வேண்டாம். ஆக, தற்கால அலங்கோல அலங்காரத்தால் மனம், பொருளாதாரம், இரண்டுமே பாதிக்கப்படுகின்றன.

— எஸ். எஸ். குமாரி, திருச்சி — 14.

இன்றைய அலங்காரம் அகங்காரமாகி அலங்கோலமாகி அருவருப்பாகிவிட்டது. ஆள் பாதி; ஆடை பாதி என்பார்கள். ஒரு மனிதனின் பண்பாட்டில் ஆடை பாதி பங்கு பெறும் என்ற பொருள் மாறி, ஆடையானது பாதி உடலை மறைத்தால் போதும் என்ற புது அர்த்தம் தோன்றிவிட்டது!

— காமாட்சி சத்தியநாராயணன், வேலூர்.

நம் நாடு உஷ்ணம் மிகுந்தது. இதில் டைட் பாண்டும், டைட் சட்டையும்! புயல் அடித்தால் கூட உள்ளே துளிக் காற்றும் நுழைய முடியாத அளவு டைட்...! பார்த்தால் மன்னியுங்கள் — எனக்குச் சோளக் கொல்லைப் பொம்மைதான் நினைவுக்கு வருகின்றது. பெண்களோ ஆணுக்குச் சளைத்தவரில்லை என்பதைப் போல உடலின் பெரும் பகுதி வெளியில் பளிச்சிடுமாறு உடை உடுத்துகின்றனர். விசுவாமித்திரர் என்ன, வசிஷ்டரே பார்த்தாலும் மோகம் கொள்ளும் விதத்தில் அவர்கள் செய்து கொள்ளும் அலங்காரம், அலங்காரமே அல்ல, அலங்கோலம் தான். பெண்கள் குத்து விளக்கு போல ஒளி விட வேண்டியவர்களே அன்றி, பிளாஷ் லைட் போல் விழி கூசும் ஒளி பாய்ச்சக் கூடியவர்களாய் இருத்தலாகாது.

— சி. எஸ். சியாமளா, மதுரை — 20.

இறுக்கிப் பிடிக்கின்ற உடைகளால் இரத்த ஓட்டம் பாதிக்கப்படுகிறது. தட்பவெப்ப நிலைக்கு ஒவ்வாத நாகரிக உடையால் உடல் நலக் கேடு. குதிகால் உயர்ந்த செருப்பால் முதுகுவலி. கண் மை, நகச்சாயம், உதட்டுச் சாயத்தால் அந்தந்த அவயவங்களுக்குத் தீமை. பலவித முடியலங்காரம் செய்யப் போய்ச் சில நாட்களில் முழு மொட்டை... ஐயய்யோ சொல்லி மாளாதப்பா!

— நெ. சா. ஆரோக்கியராஜ், நெய்வேலி.

கவர்ச்சியாக உடையணிவது வேறு. ஆபாசமாய் உடையணிவது வேறு. இரண்டிற்குமுள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் அணியும் உடையை வைத்து நீங்கள் எடை போடப்படுகிறீர்கள், மதிப்பீடு செய்யப்படுகிறீர்கள் என்பதை அறிவீர்களா? பெண்கள் உடை பெண்மையைப் பிரதிபலிப்பதாயில்லையெனில் ஆண்கள் உடையும் ஆண்மையையும், கம்பீரத்தையும் பிரதிபலிப்பதாயில்லை.

— லக்ஷ்மி ராமஸ்வாமி, பம்பாய்.

முன்பு பெண்களின் கூந்தலைக் கருமேகத்திற்கு ஒப்பிட்டு, ''இயற்கையிலேயே மணம் உள்ளதா? இல்லையா?' என்றெல்லாம் வாதம் புரிந்தார்கள். ஆனால் இப்போது 'பாப்' என்று வெட்டி விடப்பட்ட கூந்தலில் ஏதாவது ஒரு 'பிராண்ட்' 'ஷாம்பூ' வாசனைதான் அடிக்கும். ஆண்களோ 'டிஸ்கோ' 'ஸ்டெப்' 'மைக்கல் ஜாக்ஸன்' என்று விதம் விதமான 'வணங்கா முடி'களாகத் திரிகிறார்கள்.

செங்குத்தாக அமையுமாறு தைக்கின்றனர். அது போலவே, பெண்களில் மெலிந்து உயரமாக உள்ளவர்கள் நீண்ட கையையுடைய ரவிக்கையையும், பெரிய பார்டர், பெரிய பூக்கள் அல்லது டிசைன்கள் உள்ள சேலைகளையும், பருத்த குட்டையான பெண்கள் குட்டையான கையையுடைய ரவிக்கையையும், சிறிய பார்டர், சிறிய பூக்கள் அல்லது டிசைன்கள் உள்ள சேலைகளையும் தேர்ந்தெடுத்து உடுத்துகின்றனர். ஆண்களும், பெண்களும் இவ்வாறு உடையணியும் போது அவர்களின் உயரம், பருமன் இவற்றின் தோற்றத்தில் விகாரம் குறைகிறது.

இதுபோலவே தங்கள் நிறம், உடலமைப்பு, முகவெட்டு இவைகளுக்கேற்பக் காதணி, கழுத்தணி, வளையல், ஹேர்பின், கடிகாரம், செருப்பு போன்றவற்றின் அளவு, நிறம், டிசைன் இவற்றைத் தேர்ந்தெடுக்கின்றனர்; கண்ணுக்கு மை போடும் விதம் புடைவை கட்டும் விதம், சிகையலங்காரம் இவையும் பலவாறு மாறுபடுகின்றன.

இளைஞர்கள், பள்ளி, கல்லூரி, ஆலயம்,

# அலங்காரம் எப்படி?

பெண்கள் 'மாடர்ன் டிரஸ்' போட்டுக் கொண்டு மிகவும் 'தாராளமாக'ச் செல்வதைப் பார்த்தால் வேதனைதான் மிஞ்சும். ஆண்கள் கல்லூரிகளில் முதல் வருடம் முடிந்தால் சட்டையின் முதல் பட்டன், இரண்டாவது வருடம் முடிந்தால் இரண்டாவது பட்டன் கழற்றி விடுவது என்ற 'பாலிஸி' வேறு. தன் 'விருப்பக் கதாநாயகன்' சினிமாவில் எதைப் போட்டாலும் தானும் அதைப் போட வேண்டும் என்ற பக்தி வேறு. மற்ற அம்சங்களில் எப்படியோ, இந்த விஷயத்தில் இருபத்தோராம் நூற்றாண்டுக்கென்ன இருபத்திரண்டாம் நூற்றாண்டுக்கே சென்று விட்டோம்!

— சி. என். முரளிராஜ், கோவை — 10.

### இளைய தலைமுறையின் அலங்காரம்: அடடா அற்புதம்! முதல் பரிசு வாதம்

புதிய புதிய ஃபாஷன்களை அமுல் படுத்துபவர்கள் பெரும்பாலும் முப்பது வயதுக்கு உட்பட்டவர்கள்தான். அந்த இளைஞர் சமுதாயத்தின் அலங்காரம் உண்மையிலேயே அழகாகத்தான் உள்ளது.

ஒல்லியாகவும், உயரமாகவும் உள்ள ஆண்கள் கோடு போட்ட துணியில் சட்டை தைக்கும்போது கோடுகள் குறுக்காக அமையுமாறு தைத்து அணிகின்றனர்; பருமனாகவும் குட்டையாகவும் உள்ளவர்கள் கோடுகள்





# இது சாத்தியமே

தும்பைப் பூவில்
இருவர் கூட
துயில் கொள்ளலாம்
தூய்மையானதொரு
அன்பு மட்டும்
இருந்துவிட்டால்.

— ப. மூர்த்தி

அலுவலகம், திரையரங்கம், முதலிய ஒவ்வோர் இடத்திற்குச் செல்லும்போதும், அந்தந்த இடத்திற்குகந்த பாணியில் உடையணிகின்றனர்.

அறிவியல் முன்னேற்றத்தால் புதிய, புதிய இழைகள், துணிகள், கலர்கள் உருவாக்கப்படுகின்றன. கம்ப்யூட்டர் உதவியால் டிசைன்கள் அமைக்கப்படுகின்றன. தையல் கலைஞர்களின் திறமையால் உடைகளில் புதிய புதிய ஃபாஷன்கள் இடம் பெறுகின்றன.

இங்ஙனம் பொருள், பொழுது, கவனம் இவற்றைச் செலவழித்து, இளைஞர்கள் செய்து கொள்ளும் அலங்காரம் அழகுக்காக வேயன்றி அருவருப்பைத் தருவதற்கல்ல. ஹிப்பிகளைப் போல ஒரு சிலர் உலவலாம். அதுபோன்ற மனநிலை பாதிக்கப்பட்டவர்களின் தோற்றத்தையும், மனிதாபிமானத்தோடு ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் வேண்டும். மாறாக, ஒட்டு மொத்தமாக இளைஞர்களைச் சாடும் இதயம், ஒன்று தலைமுறை இடைவெளியால் இருக்கவேண்டும். இல்லை, "நம்மால் இப்படியெல்லாம் முடியவில்லையே" என்ற ஆற்றாமையினால்தான் இருக்க வேண்டும்.

— டி. நாகராஜன், மதுரை — 2.

எந்தத் துறை எடுத்தாலும் போட்டிகள் உள்ள உலகில், இந்த ஆடையலங்காரங்களின் போட்டியினால் ஏற்படுகின்ற விதவிதமான டிசைன்களைக் கண்டு வியப்படைகிறோம். கற்பனை என்னும் வற்றாத ஜீவநதியைக் கொண்டு கவிஞர்கள், புதுப்புதுக் கவிதைகள் புனைவதுபோல், என்றும் மங்காத கற்பனையில் உதிக்கின்ற, கண்கவர் டிசைன்களில் ஆடைகளும், அவற்றின் நிறத்திற்கு ஏற்றாற்போல் கை, காதுகளில் அணிகலன்களும், கால்களில் புது மாதிரி பாதணிகளும் காண்கிறோம் அல்லவா? இந்தக் கலைத்திறனை வியந்து போற்றாமல் வேதனைப்படுவது முட்டாள்தனம்!

— வி. துளசிராமன், திருச்சி — 13.

அலங்காரத் துறையில் ஈடுபட இளைய தலைமுறையினர் முன்வந்துள்ளார்கள். பல்வேறு டிப்ளமாக்கள் இத்துறையில் வந்து விட்டன. கூந்தல் அலங்காரம், உடை அலங்காரம், முக அலங்காரம் இவை வெகுவாக முன்னேறி, இவற்றுக்காக அழகு தரும் நிலையங்களே தோன்றியுள்ளன. இவை வேலைவாய்ப்புக்களையும் பெருக்குகின்றன. இந்த முன்னேற்றங்களை வரவேற்கத்தான் வேண்டும்.

— எஸ். லதாநாராயணன், வாரங்கல்.

பழைய தலைமுறையில் பெண்கள் "அடுப்படியே திருப்பதி" என்ற குறுகிய வட்டத்திற்குள் உழன்று வந்தார்கள். தற்போதோ பெண்கள் திரைப்படத் துறை முதல் காவல் துறை போலீஸ் கமிஷனர் பதவி வரை வகித்து வரும் இந்நாளில் பழைய பாணி உடைகளையே அணிய வேண்டும் என்பது கொடுமை. புதிய ஃபாஷன் உடைகள் விலை அதிகம் என்று கூறுபவர்கள் பட்டுப் புடைவை, பட்டு வேட்டி போன்றவைகளும் விலை குறைந்தவை அல்ல என்பதை உணர வேண்டும். தற்போது துணிகளின் தரம் விலை ஆகியவற்றை விட உடையின் ஃபாஷன் முக்கியமாகக் கருதப்படுகிறது. அதற்கே ஒரு விலை உண்டு!

— வி. சொக்கலிங்கம், இராஜபாளையம்.

பேண்ட் புதிதாக அறிமுகப்படுத்தப்பட்ட காலத்தில் வேட்டி கட்டிய தாத்தாக்களும், அம்மாமிப் பாட்டிகளும் தீவிரமாக மனத்தளவில் எதிர்த்திருப்பார்கள். ஆனால், என்னாயிற்று? நாகரிக முன்னேற்றத்தில் அவர்களின் பேதைமைப் பேச்சு அடிபட்டுப் போயிற்று! இன்று தாத்தாக்களே பேண்ட் போடுகிறார்கள். பாட்டிகள் ஹவுஸ் கோட் அணிகிறார்கள். சிலருக்குச் சில விதமான உடைகள் பிடிக்கவில்லை என்பதால் கேலிப் பேச்சு பேசினால், அவ்வப்போது பூக்கும் புதுமைப் பூக்களை நாம், அழித்தவர்களாகிறோம்! உடை விஷயத்தில் அவரவர் சுய அறிவுடன் நடந்து கொள்வதால், ஆபாசம்: என்ற கருத்துக்கே இடமில்லை!

— பி. எம். பிரபாகரன், திருமருகல்.

பெண்களின் உதட்டுச் சாயம், நகச் சாயம் முதலியவை இருபது ஆண்டுகளுக்கு முன்னால் இருந்தது போல முகத்திலடிக்கும் வண்ணமாக இல்லாமல், இதமாக நிறத்தை ஒட்டி இருக்கின்றன. ஆண்களைப் பொறுத்த மட்டில் "தனக்கழகு மொட்டை பிறர்க்கழகு குடுமி" என்பாராம் பாரதியார். எப்போது குடுமியைத் துறந்து கிராப்பை ஒப்புக் கொண்டோமோ, அப்போதே கிராப்புகளில் மாற்றங்களையும் ஏற்றுக் கொண்டவர்களாகி விட்டோம்.

— பீ. எஸ். கே. சுப்பிரமணியம், இராஜபாளையம்.



கல்கி
2.11.86
தீபாவளி
சிறப்பிதழ்
கல்கி
2.11.86
தீபாவளி
ரி
சிறப்பிதழ்
உஷாசுப்பிரமணியன்
எழுதும் தொடர் கதை
மோகம் என்பது இதுதானோ?
சுபா
எழுதும் தொடர் கதை
சின்னச் சின்ன கனவுகள்
"என் குறி தப்பாது!"
மலையாள சினிமா - தமிழ் வடிவம்

## நீங்கள் கேட்டவை — தராசு



கடவுள் மாதிரி!



ஜனதாவுக்கு எதிர்காலம்

எனக்குப் பால் குடம் எடுப்பதாகக் கனவு கண்டேன், பலிக்குமா?

! பலிக்காது என்பது ஒருபுறமிருக்க, கனவுகள் அற்ற ஆழ்ந்த ஆறு மணி நேர உறக்கமே ஆரோக்கியமானது. மறுநாள் சுறுசுறுப்பாகச் செயலாற்ற உதவுவது. கனவுகள் அற்ற ஆழ்ந்த உறக்கத்துக்குச் செய்ய வேண்டியன இரண்டு: சாப்பாட்டின் அளவைக் குறைப்பது; தேகப் பயிற்சி செய்வது.

* ஜி. சந்தானம், வலங்கைமான்.

? மனிதனுக்கு இரண்டு இதயம் இருந்திருந்தால்?

! இல்லாமலென்ன? சிலர் மூன்று நாலு இதயங்களைக் கூட வைத்துக் கொண்டு அல்லாடுகிறார்களே! மனம் என்ற அர்த்தத்திலும் சரி, இருதயம் என்ற உறுப்பானாலும் சரி, ஒன்றே ஒன்று இருப்பதுதான் சிறந்தது. ஸ்திதப்பிரக்ஞன் (உறுதியான உள்ளம் உடையவன்) என்று அவனைத்தான் கீதை போற்றுகிறது.

* கா. அப்துல் மஜீத், திருமயம்.

? சிவாஜி கணேசன் நோய்வாய்ப்பட்டமை பற்றி நாளிதழ்களில் வெளியான செய்திகள் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருந்தனவே?

! உண்மைகளை மூடி மறைப்பது எவ்வளவு பிசகோ அவ்வளவுக்கு மிகைப்படுத்தி எழுதுவதும் தவறுதான். அது பத்திரிகை தர்மம் ஆகாது. இந்நாளில் பரபரப்பான செய்திகளைச் சூடாகத் தரவேண்டும் என்ற போட்டி நாளிதழ்களிடையே நிலவுவதால் ஏற்பட்ட கோளாறுதான். சிவாஜியின் கூழாங்கல் அளவு உடல்நலக்குறைவு மலையத்

# மந்திரிக்கு அழகு...?

தனை பெரிதாக்கப்பட்டது.

* டி. கே. பாஸ்கரன், வேலூர் (வ. ஆ.).

? தமிழன் என்ற உணர்வுக்கும் இந்தியன் என்ற உணர்வுக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

! தமிழனுக்கு இந்தியனாக இருப்பதில் பெருமையே. ஹிந்தியனாயிரு என்னும் போதுதான் பிரச்னை.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? நண்பன், காதலி, மனைவி — ரகசியங்களைப் பகிர்ந்து கொள்ள யார் ஏற்றவர்?

! த்ரீ இன் ஒன்னாக இருப்பவர். அதைவிடச் சிறப்பு ரகசியங்களுக்கு அவசியமற்ற திறந்த புத்தகமாக அமையும் வாழ்க்கை.

* ப. விநாயகம், புதுதில்லி.

? திடீரென்று தமிழ் நடிகனுக்கு ரசிகர்கள்

* க. தியாகராஜன், நெய்வேலி.

? ஹிந்தி திணிப்புக்கும் புற்றுநோய்க்கும்



[illegible]



பல்லாண்டு வாழ்க



வீட்டுக்கொரு மரம்
வளர்த்திட
விதியொன்று செய்தவரே!
எம் வீட்டில்
ஒன்றுக்கு இரண்டாக
யாம் வளர்த்த மரங்கள்
கனிதரும் கனிவின்றியும்
நிழல்தரும் நினைவின்றியும்
வஞ்சம் செய்ததால்,
இன்றெமக்கு
வயோதிகர் இல்லமே
தஞ்சம் தந்தது.

— ப. விஜயபாலன்

உள்ள வேறுபாடு என்ன?

! புற்றுநோயைக் குணப்படுத்த மருந்து கண்டுபிடித்து விடுவார்கள்.

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? மந்திரிக்கு அழகு?

! வரும் பொருள் சேர்த்தல்.

* ஜெ. முகம்மது ஃபாரூக், நெல்லிக்குப்பம்.

? தீபாவளி என்றதுமே உமது நினைவுக்கு வருவது?

! பெண்டு கழற்றிவிடும் தீபாவளிமலர் வேலைகள்!

* சீனுசங்கர், திருப்புன்கூர்.

? முரசொலியில் சின்னக் குத்தூசி கட்டுரைகளைப் படிப்பீர்களா?

! குத்தூசியா அது? ஆணி அறைந்தாற் போன்ற வாதங்கள் அல்லவா? அவருடைய சில கருத்துக்களுடன் ஒத்துப் போகாதவர்கள் கூட அவருடைய எழுத்து நடை கண்டு வியக்காமல் இருக்க முடியாது. தமது வாதங்களைச் சமர்ப்பிப்பதற்கு முன் மேற்கோள்கள் காட்ட அவர் வகுத்துக் கொள்ளும் முயற்சிகளைப்பாராட்டாமலிருக்கமுடியாது.

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? ஜனதாக் கட்சிக்கு எதிர்காலம் இருக்கிறது என்று இரா. செழியன் கூறியிருப்பது பற்றி?

! பாவம், அவர் வேறு எப்படி ஸார் பேச முடியும்? இப்படித்தானே பேசி ஆக வேண்டும்! கர்நாடகத்தில் நடப்பது கூட ஜனதா ஆட்சி என்பதை விட ஹெக்டே ஆட்சி என்பதுதான் பொருந்தும் என்பது நமக்குத் தெரிந்ததுதானே!

* அ. சுந்தரம், சேலம்.

? முதலிலேயே 23 நாள் போனஸ் என்று அறிவித்திருந்தால் மேலும் கொடு என்று போராட்டம் நடத்தியிருப்பார்கள், மத்திய அரசு ஊழியர்கள். இப்போது கப்சிப். நிதி மந்திரியின் தந்திரம் எப்படி?

! பதினைந்து நாள் போனஸ், அதுவும் பி. எஃப்பில் சேர்க்கப்படும் என்று முதலில் கூறிவிட்டுப் பின்னர், 23 நாள் போனஸ் அதுவும் ரொக்கமாக என்று சொன்னது சாணக்கியம்தான். பெட்ரோல், சமையல் காஸ் விலைகளை எக்கச்சக்கமாக உயர்த்திவிட்டுப் பிறகு சற்றே குறைக்கவில்லையா? அதுபோலத்தான். பாருங்கள், வி.பி.சிங்கை! கண்களிலேயே குறும்புத்தனம் மின்னவில்லை!

* இராமு. குமார், திருவானைக்கோயில்.

? உங்கள் மனத்தை விட்டு அகலாத நீங்கள் கலந்து கொண்ட ஒரு விழா பற்றி...?

! பழைய மாம்பலத்தில் பப்ளிக் ஹெல்த் சென்டர் ரொம்பப் பிரசித்தம். அதன் ஓர் அங்கமாக விசேஷக் குழந்தைகளுக்கான பி. வி. எஸ். என். மூர்த்தி கேந்திரம் என்று ஓர் அமைப்பு இயங்குகிறது. 'மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கான இல்லம்' என்று கூறாமல் 'விசேஷக் குழந்தைகள்' என்று குறிப்பிட்டதே என் மனத்தை நெகிழ்வித்தது. அவர்களுடைய ஆண்டு விழாவில் கலந்து கொண்டு கள்ளம் கபடம் அறியாத அந்தக் குழந்தைகளின் ஆடலையும் பாடலையும் கண்டு களித்தேன். அவர்களைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டு, 'நாம் வெறுத்து ஒதுக்கப்படுகிறவர்கள் அல்ல; அன்பைப் பெற்று உணரக் கூடியவர்களே' என்ற எண்ணத்தை அந்தக் குழந்தைகளிடம் ஏற்படுத்தத் தங்கள் வாழ்நாளை அர்ப்பணித்துக் கொண்ட சிலரைப் பார்த்தேன். குறிப்பாக இதற்கென்றே விசேஷப் பயிற்சிகள் பெற்றுள்ளதிரு. ஜலாலுத்தீன். கடவுளை நேரில் தரிசித்து வந்த மாதிரி இருந்தது. இது நடந்து ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. ஆனால் ஆயுசுக்கும் மறக்காது!

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
கா. அப்துல் மஜீத்,
கே. எஸ். ஏ. கரீம் மளிகை,
திருமயம் — 622 507,
புதுக்கோட்டை (மா. வ.)

போட்டிக்கதை — 7

# பட்டம்

சந்திரபிரபா



சாப்பாட்டுத் தட்டை விசி எறிந்தான் ரவி.

அது சுவரில் பட்டு, ஒரு பக்கம் நசுங்கி, ரசம் சாதம் அம்மா மீது தெளித்து தரையெல்லாம் பூப்போட, கீழே விழுந்து உருண்டு அடிபட்ட குட்டி நாய் கத்திக் கொண்டே சுற்றிச் சுற்றி ஓடி, சுருண்டு படுத்துக் கொள்வது போல் — ஒரு வட்டமடித்துப் படுத்துக் கொண்டது.

அம்மா விக்கித்துப் போய் ஒரு கையைக் கன்னத்தில் வைத்தபடி அசையாமல் நிற்க, 'விருட்' டென எழுந்த ரவி, தன் அறைக்குப் போகும் எண்ணத்துடன் காலை இரண்டெட்டு முன் வைத்தவன், அப்படியே நின்றான்.

அறை வாசலில் —

அப்பா நின்றிருந்தார்.

ஒரு கணம்தான்...

அப்பா தம் பலத்தையெல்லாம் பிரயோகித்து — ரவியின் கன்னத்தில் — 'பளார்' என ஓர் அறை கொடுக்க —

அதன் உக்கிரம் அவன் கன்னத்தை ஊடுருவிச் சென்று அவன் அம்மாவைத் தாக்கி, அவன் வலியுணருவதற்கு முன்பே அவள் உணர்ந்து, 'ஆ'வென்று அலறி — அடுத்த கையையும் கன்னத்தில் வைத்துக் கொண்டாள்.

அதுவும் ஒரு கணம்தான்.

கற்சிலை போல் ஸ்தம்பித்து நின்றுவிட்ட வளர்ந்த மகனை ஓடிவந்து கட்டிக் கொண்டாள்.

''ராசா'' என்றாள் மகனைப் பார்த்து.

பிறகு, குளமான கண்களுடன் ஆக்ரோஷமாய்க் கணவன் பக்கம் திரும்பி —

''செல்லமா வளர்த்த புள்ளேயே இப்படி அடிக்கப் போட்டீங்களே... வலி தாளாமல் துடிக்கிறானே...'' என்று புலம்பலைத் துவங்கினாள்.

''நிறுத்துமை...'' என்று கத்தினார் தர்மராஜன்.

அவனா துடிக்கிறான்? நீ செல்லம் குடுத்துக்





குடுத்து... ருசி ருசியா ஆக்கிப் போட்டு... ஒடம்பு பூரா திமிரும்... பிடிவாதமும் ஊறிப் போயி... மரக்கட்டையாட்டம் நிக்குறாண்டி... நீதான் என்னமோ அடிப்பட்டாப்பல துடிக்கறே...!''

''பின்ன... நான் சொமந்து பெத்த புள்ளே யாச்சே... துடிக்காதா?''

''என்னடி சொன்ன? என்னடி சொன்ன? தோ பாரடி... நீ புள்ளைய வயித்துல வெச்சிக்கிட்டு... பிரசவ வேதனைல துடிச்சப்ப, உன்னோட ஒடம்பு வலிய நெனச்சி உனக்காகத் தாண்டி அலறினே ! ஆறுல் கதவுக்குவெளியில... குறுக்கும் நெடுக்குமா நடந்தபடி கையைப் பெசஞ்சிக்கிட்டு, உனக்காகவும் உன் வயித்துல இருக்கிற புள்ளைக்காகவும் நான் துடிச்ச துடிப்பு உனக்கெப்படித் தெரியும்? உனக்கிருக்கிற பாசம் பெத்த அப்பன் எனக்கிருக்காதா? பெத்தவ பெத்தவன்னு என்னமோ ஊர்ல யாருமே செய்யாத காரியத்தைச் செஞ்சவளாட்டம் பேசிப் பேசி புள்ளையைக் கண்டிக்க விடாம கெடுத்துக் குட்டிச்சுவராக்கிட்டே....''

''இப்ப எதுக்கு அவனை அடிச்சிருக்க ளாம்? வாய்க்குருசியாவெசாப்பிட்டபுள்ள... ரசமும் பொறியலும் புடிக்கலேன்னு ஏதோ தூக்கி எறிஞ்சிட்டான்... அதுக்குப் போயி...''

'பளார்' என விழுந்தது அடுத்த அறை—அவள் கன்னத்தில்.

ருத்ரமூர்த்தியாய் நின்றார் தர்மராஜன்.

''இத்தனை வருஷத்துல மொத தடவையா உன்னையும் அவனையும் அடிச்சிருக்கேண்டி. இதுவே கடைசியானதா இருக்கிறபடி பாத்துக்க. இந்தச் சோத்துக்காக ஒவ்வொருத்தர் என்னமா பாடுபடறாங்கன்னு உங்களுக்குத் தெரியுமாடி? இனிமேல இந்த வீட்ல ரசம் சாதம் தவிர வேற ஒண்ணும் செய்யக் கூடாது! மீறி ஏதாச்சும் செய்தே, அப்புறம் நடக்கறதே வேறே! ஜாக்கிரதை!''

**ம**று நாள் விடியல் நேரம்...

'ஓ' என அலறினாள் காமாட்சி.

ஐயோ! எம்புள்ள போயிட்டானே!''

விழுந்தடித்துக் கொண்டு படுக்கையிலிருந்து எழுந்து ஓடி வந்தார் தர்மராஜன்..

''காமாட்சி... என்னாச்சு... என்னாச்சு?''

''துணியெல்லாம் பொட்டில எடுத்துக்கிட்டுப் போயிட்டானே எம் புள்ள... எங்க போனானோ... கடவுளே!''

வேகமாய் ரவியின் அறைக்குள் சென்று விட்டு — அதே வேகத்தில் திரும்பி வந்தார் தர்மராஜன்.

அவர் கையில் ஒரு கடிதம் இருந்தது.

''உன்னோட செல்லப் பிள்ளை சும்மா வீட்டை விட்டு ஓடிப் போகலேடி... அவங்கப்பனுக்குப் பாடம் படிச்சித்தர போயிருக்காண்டி'' என்றபடி அதைக் காமாட்சியிடம் நீட்டினார்.

காமாட்சி படபடப்புடன் அதைப் படித்தாள்.

'பிரியமுள்ள அம்மாவுக்கு,

என்னை மிருகத்தை அடிப்பது போல் கன்னத்தில் அறைந்த அப்பாவுக்குப் பாடம் கற்பிக்கவே நான் வீட்டை விட்டுப் போகிறேன்... எல்லாரும் அப்பாவைத்திட்ட வேண்டும்... பதில் சொல்ல முடியாமல் அவர் திணற வேண்டும். வேலை கிடைக்கும் வரையில் செலவுக்கு வேண்டும் என்பதால், பீரோவில் இருந்து ஆயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டேன்...

**ர**விக்கு அப்பாவை நினைக்க நினைக்க ஆத்திரமாய் வந்தது.

கன்னம் இன்னும் கூட வலிப்பது போலிருந்தது. வாய்க்கு ருசியில்லாததை எப்படிச் சாப்பிடுவதாம்? நல்லா கேட்டிருக்கணும்.

'பெத்துக்கல? அதுக்குப் போட்டுத்தான்

ஆகணும். நான் கேக்கறதை எல்லாம் குடுக்க முடியலேன்னு ஏன் பெத்துக்கிட்டே?''

மெட்ராஸ் போயி... வேலே செஞ்சி... நெறைய சம்பாதிச்சி, அம்மாவை மூணு வேளேயும் பிரியாணி செய்யச் சொல்லிச் சாப்பிடணும்!

பகல் இரண்டு மணிக்குச் சென்னையை அடைந்து, கேட்டுக் கேட்டுச் சைதாப்பேட்டையை அடைந்து, பாலத்தைக் கடந்து...

''ஏங்க... கக்கன்புரம் எங்கே இருக்குங்க?''

''கக்கன்புறமா? தோ கோர்ட்டாண்ட தாங்கீது.''

''என்னங்க... இது எதுவோ சேரி போல இருக்கு?''

''கரீட். இது சேரியேதான். கல்ற சேரின்னு பேரு... அது வாண்டான்னுட்டு கக்கன் புரம்னு போர்டு வெச்சாங்க... மொதல்ல போர்ட தாக்கினு போயி 'இலே நர் மன்றம்'னு எய்தி மாட்டிக்கினுங்க. அப்பால போஷ்ட்டு கம்பம் ரெண்டும் காணு பூட்டுது... ஆர பாக்கணும்? தா... இந்த ஊடுத்தான் நம்புளுது...

ரவி அந்தச் சேரியின் முகப்பில் இருந்தான். பாக்கெட்டிலிருந்து மறுபடியும் எடுத்து ஒரு பழைய 'இன்லண்ட்' கவரின் பின்புறமிருந்து விலாசத்தைப் பார்த்துக் கொண்டான். அவனால் நம்பவே முடியவில்லே.

'இங்கேயா இருக்கான் சிவா?'

''எனக்கு ரொம்ப வருஷம் சிநேகம்ங்க... சிவஷண்முகம்னு பேரு...''

கூட்டி வந்த ஆள் யோசிப்பது போல் தெரிந்தது. திடீரென்று ''தோ பார் அந்த ஆளா பாத்துக்க...'' என்று சுட்டிக் காட்ட...

அந்தக் குடிசைப் பகுதிக்குள் வெள்ளே வேட்டியும் சட்டையுமாய், கருத்த உடலும் சுருட்டைத் தலையும் முகத்தில் அலாதியான ஒரு களையுமாய் வந்து கொண்டிருந்த ஆளே உற்றுப் பார்த்து, அருகில் வந்தவுடன் அடையாளம் கண்டு, 'சிவா' என்று ரவி அழைக்க, 'ரவி' என்று முகம் மலர்ந்தான் சிவா.

''வா,வீட்டுக்குப்போகலாம்'' என்றசிவா; 'இவர் நம்ம ஊர்க்காரரு மாசிலாமணி, ரவின்னு பேரு... எட்டாங்கிளாஸ் வரை ஒண்ணுப் படிச்சோம். அப்புறம்தான் நான் இங்க வந்துட்டேனே! ரெண்டு மூணு தடவை லெட்டர் போட்டேன். அப்புறம் எங்க நேரம்...? உனக்குத்தான் தெரியுமே?'' என்று கூற.

''அல்லோ'' என்று கைகுலுக்கினர் மாசிலாமணி..

''நா சால்பட்டா பரம்பறை தெரியா குஸ்தி எல்லாம் செஞ்சிருக்கிறேன். முன்ன மயில்சாமி பீரிட்ல ஒய்ம்ஸில நம்ம பைட் தெனிக்கும்...''

''என்ன... மாசிலா இப்பவே ஆரம்பிச்சிட்டியா? கை, கால் கழுவிக்கிட்டு வீட்டுக்கு வா. சாப்பிட்டுக்கிட்டே எல்லாம் சொல்லிக்கலாம்!'' என்று சிவா கூற. இருவரும் நடந்தனர்.

நடக்கையில் சிவா சுருக்கமாய்த் தன்னைப் பற்றிக் கூறினான்.

''ஊர்ல இருந்து வந்ததும் — ஆரம்பத்துல வேலே கெடைக்காம ரொம்ப கஷ்டப் பட்டேன்டா. அப்புறமா, பட்டினப்பாக்கத்துலே வாட்ச்மேனு இருந்த ஒருத்தர் அங்கேயே பம்ப் ஆபரேட்டரா வேலே வாங்கிக் குடுத்தார். கவர்ன்மெண்ட் வேலே, ஸ்விட்ச் போட்டுட்டு பேப்பர் படிக்கணும்... சாயங்காலம் ஆஃப் பண்ணிட்டு வீட்டுக்குப் போயிடணும். அந்த வாட்ச்மேன் செத்துட்டாரு. அவர் பொண்ணே நான் கட்டிக்கிட்டேன். ரொம்ப நல்ல ஆளுங்கடா இவுங்க... இளைஞர் மன்றம்னு ஆரம்பிச்சிருக்கோம்... நான்தான் செயலாளர்.

''ஆட்களை இப்படி குடு. என்ன திடீர்னு இந்தப் பக்கம்? ஊர் சுத்திப் பாக்கவா?''

''ஆமா'' என்றான் ரவி.

''ஹைகோர்ட், லைட்ஹவுஸ், அண்ணு சமாதி, மகாபலிபுரம்...''

'கொர்ர்ர்க்' என்று உறுமிவிட்டு — முள் வேலிக்குள் ஓடியது ஒரு பன்றிக் குடும்பம்.

''சரோ'' என்றான் சிவா.

உள்ளிருந்து வெளிப்பட்டாள் அவன் மனைவி., நல்ல நிறத்துடனும், முகம் நிறைந்த களையுடனும்.

''நான் அடிக்கடி சொல்ல மாட்டேன்? ஊர்ல ஒரு சிநேகிதன் இருக்கான்னு...? இது தான்... நீ ஊர் சுத்தி பார்க்கத்தானே போறே? ராத்திரி இந்த வேப்ப மரத்தடியிலே படுத்தா அட்டகாசமா தூக்கம் வரும். மீதி வசதி எல்லாம் பாக்காதே. விடிய காலேல கெளம்பணும். மொதல்ல மெட்ராஸ் வாழ்க்கை எப்படின்னு பாரு. அப்புறம் மாமூல் எடங்களேப் பார்க்கலாம்... கைகால் அலம்பிக்க'' என்றபடி ரவியின் பெட்டியை வாங்கி உள்ளே வைத்தான்.

உள்ளே நாலேந்து பேர் வசதியாய் உட்கார இடம் இருந்தது.

மாசிலாமணி உள்ளே வந்து உட்கார்ந்தார்.

சாப்பாடு அமர்க்களமாய் இருந்தது. தைத்த இலேயில் — ரவிக்காக ஸ்பெஷலாய்த் தயாரிக்கப்பட்ட உணவு —

சாப்பிட்டு முடித்து —

''பிரமாதம்...'' என்று சரோஜாவிடம் கூறினான் ரவி.

விடியற்காலே ரவியை சிவா எழுப்பிய போது — மணி நான்கு இருக்கும்.

''எழுந்திரு... சீக்கிரமா கௌம்பு...'' என்று துரிதப்படுத்தினான் சிவா. இன்னும் வெளிச்சம் வரவில்லே.

ரவி அவசரமாகப் புறப்பட — அவனே சைக்கிளில் ஏற்றிக் கொண்டு வேகமாய் மிதித்தான் சிவா.

அடுத்த சில நிமிடங்களில் — கிண்டி மின்சார ரயில் நிலேயத்தின் முன் இருந்தனர் இருவரும்.

வெறிச்சோடிக் கிடந்த பஸ் ஸ்டாப்பில் சைக்கிளே ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி விட்டு நின்று கொண்டார்கள்.

லேசாக வெளிச்சம் தோன்றிக் கொண்டிருந்த நேரம்...


ஒருத்தரைப் போல் ஒருத்தர் நிறம் இருத்தல் இல்லை.
பொருத்தமளிக்க உமக்கென்றே 3 வித வண்ணச் சாயல்களில் வருவது லக்மே காலமைன் ஒன்றே.
லக்மே காலமைன் ஒன்றுதான்
மூவித வண்ணச் சாயல்களில்
மோகனமாய் வருகுது:
நேச்சுரல், லைட், கோல்டு, இதில்
உமக்கொன்று சேர்த்தி,
ஒருங்கிணைய நேர்த்தி-எண்ணிலா
வண்ண மேனியரை இனம்பிரித்து
உணருதே லக்மே. இன்மணமுடன்
மேனிமீது இலகுவாய் இழையும்
லக்மே காலமைன் —தனிநிற
உரிமையைத் தருகுது உமக்கு.
பரிட்சார்த்தப் பேக்காகவும்
கிடைக்குது பதம்பார்க்க வசதியாக
நேச்சுரல்
—மாநிற
மேனியருக்கு
லைட்
—சிகப்பு
மேனியருக்கு
கோல்டு
—கருவண்ண
மேனியருக்கு
லக்மே
காலமைன்
சரும வண்ணம் எவ்வண்ணம்
சாயலுண்டு அவ் வண்ணம்.
Tm

ஒரு பதினொன்று பதினைந்து வயதில் நரிக் குறவச் சிறுவன் — கட்டுக் குடுமியும் காது வளையமும், அழுக்குச் சட்டையும் கோவணமுமாய் — மிக வேகமாய், சிறிய, நான்கு சக்கரங்கள் பொருத்தப்பட்ட, ஒன்றுக்கு இரண்டடி சதுரப் பெட்டி போன்ற வண்டியை இழுத்துக் கொண்டு சாலையில் கடந்து சென்றான்.

சிவா பரபரப்பாய் —

"ரவி... இவனுக்காகத்தான் ஒன்ன கூட்டிக்கிட்டு வந்தேன்... வா... வந்து பார் அவன் என்ன செய்யறான்னு?" என்றவுடன் — சைக்கிளை எடுத்துக் கொண்டு சிவா நகர — ரவி பின்தொடர்ந்தான். சிறிது தூரம் மெயின் ரோட்டிலேயே நடந்து — ரோட்டைக் கடந்து எதிர்ப்புறத்தில் போய் மரத்தடியில் நின்று கொண்டு கவனித்தனர்.

அந்த நரிக்குறவன் — அங்கிருந்த ஒரு சுமாரான ஓட்டலின் பக்கத்தில் — அதை ஒட்டினாற் போலிருந்த பள்ளத்தில் வண்டியுடன் இறங்க —

அங்கு எட்டு ஒன்பது வயதில் இன்னொரு சிறுவன் — கையில் அகன்ற தகர டப்பாவுடன் வரவேற்க...

ரவி ஆச்சரியப்படும் அளவில், நம்ப முடியாமல் வாயைத் திறந்து கொள்ள, ஓட்டலின் பின்புற சமையலறையிலிருந்து ஓடி வந்த கறுப்பு நிறக் கழிவு நீர் ஓடையின் இருபுறமும் அந்த இருவரும் அமர்ந்து கொண்டு, தண்ணீரில் அடித்துக் கொண்டு வந்த சாதப் பருக்கைகளை — ஒவ்வொன்றாக எடுத்து — டப்பாவில் உள்ள தண்ணீரில் கழுவி — வண்டியில் போட்டார்கள்.

"ரவி!" என்றான் சிவா.

"நம்ப முடியலே இல்லே? என்னாலேயுங் கூட மொதல் தடவை பார்த்தப்ப நம்ப முடியலே. இப்படியே ஒவ்வொரு பருக்கையாக் கழுவி அந்த வண்டில போட்டு... ஓர் எட்டு மணிக்குள்ள வண்டில பாதிக்கு மேல ரொம்பிடுடா..."

"எனக்கென்ன புரியலேன்னா... இவங்க இப்படிச் சாக்கடையிலேந்து எடுக்குறதுக்குப் பதிலா... அந்த ஓட்டல்காரன் கிட்ட கேட்டுப் பழசா... மீந்து போனதை வாங்கிக்கக் கூடாதா?"

"இல்லே... மீதியாகுற சாதம்... சாப்பிட்ட இலை எல்லாத்தையும் ஒரு பால்காரர் மொத்தமா மாசம் இவ்வளவுன்னு குடுத்து வாங்கிக்கறார்... இவனுங்க எடுக்குறதெல்லாம் கை கழுவுற எடத்துலயும் — பாத்திரம் கழுவுற எடத்துலயும் இருந்து வர்றது."

"இதை என்ன செய்வாங்க?"

"அப்படிக் கேளு" என்ற சிவா சைக்கிளை நகர்த்திக் கொண்டே தொடர்ந்தான்:

"இந்தப்பையலோட பாட்டியா, அம்மாவா தெரியல. ஒரு நரிக்குறத்தி. ஒரு பெரிய பானைல இந்தச் சோத்தையெல்லாம் போட்டு... கொஞ்சம் சாதம் வடிச்ச தண்ணியையும்... குழாய்த் தண்ணியையும் விட்டுக் கூழா கரைச்சிக்கிட்டு விப்பா. பிச்சக்காரங்க. நரிக்குறவங்க நெறைய பேருக்கு...

அருள்வாக்கு



ஆஹாரம் என்றால் நாக்கால் சாப்பிடுவது மட்டுமில்லை. பஞ்ச இந்திரியங்களுக்கும் ஒவ்வொரு ஆஹாரம் உண்டு. பல காட்சிகளைப் பார்க்கிறோம். இது கண்ணுக்கு ஆஹாரம். பலவிதமான பாட்டு, பேச்சுக்களைக் கேட்கிறோம். இது காதுக்கு ஆஹாரம். இப்படியே நாம் அநுபோகம் பண்ணுகிறதெல்லாம் நமக்கு ஆஹாரம்தான். இதில் எல்லாமே சுத்தமானதாய் இருக்க வேண்டும். மனஸைக் கெடுக்கிற காட்சிகளைப் பார்க்கப்படாது; மனஸைக் கெடுக்கிற பேச்சுக்களைக் கேட்கக் கூடாது. அநுபவிக்கிறதெல்லாம் ஈச்வர ஸாக்ஷாத்காரத்துக்கு உதவுகிறவையாகவே இருக்க வேண்டும்.

இப்படிப் பொதுப்படையாகச் சொன்னாலும், இந்தப் பலவிதப் புலன் நுகர்ச்சிக்கான ஆஹாரங்களிலும் வாயால் நுகர்கிற ஆஹாரந்தான் முக்கியமாக இருப்பதால் அதைப் பற்றி இவ்வளவு ஆசார விதிகள் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதுதான் ஸ்தூலமாக நமக்கு உள்ளேயே போய் தேஹம் முழுக்க ரத்தமாக வியாபிக்கிறது. இதுவே சித்தத்தையும் பாதிக்கிறது. ஒரு பக்கம் ஆஹாரமில்லாவிட்டால் மநுஷ்யன் ஜீவிக்க முடியவில்லையென்றால் இன்னொரு பக்கமோ அதிமித ஆஹாரமாக இல்லாவிட்டால் தேஹத்துக்கும் ச்ரமம், மனஸுக்கும் அசாந்தி என்றாகிறது. வயிற்றிலே திணித்துக் கொண்டே போவதால் சாப்பாட்டுப் பொருளுக்கும் நஷ்டம், காரியம் செய்ய முடியாமலும் நஷ்டம். இவற்றை விட த்யானத்தில் மனஸ் ஈடுபடாமல் போவது பெரிய நஷ்டம். ஆகையால் "சோற்றால் அடித்த பாண்டம்" என்றே மநுஷ்யனுக்குப் பேர் இருப்பதால் இந்தப் பாண்டமும் இதற்கு உள்ளேயிருக்கிற மனஸும் நல்லபடியாக வளர்வதற்காக ரிஷிகள் காட்டிக் கொடுத்திருக்கும் போஜன விதிகளை மேற்கொண்டு நடத்திக் காட்ட வேண்டும். இதன் முக்கியத்துவமும் அவசியமும் எல்லோருக்கும் புரிவதற்குப் பரமேச்வரனைப் பிரார்த்தனை பண்ணிக் கொள்கிறேன். பக்தி, ஞானம், உயர்ந்த குணங்கள், உத்தமப் பண்புகள் ஆகியவற்றால்தான் மநுஷன் மநுஷனாக வாழ்கிறான். இந்தக் குண விசேஷங்கள் விருத்தியாகவும் ஆஹார நியமமே உதவுகிறது என்று நம் சாஸ்திரங்கள் காட்டுகின்றன.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**



''எந்தப் பாத்திரம் கொடுத்தாலும் ஏற்று நடிப்பேன்னு பேட்டியில் சொன்னது தப்பாப் போச்சு.''

நடிகையின் தோழி: ''ஏன்?''

''நான் நடிக்கிற [illegible] [illegible] [illegible] பாத்திரமாக் கொடுக்கிறாங்க!''

— [illegible]

கேண்டீன் அது! ஒரு செம்பு நெறைய தண்ணி சோறு... இருவத்தஞ்சு பைசா.

''ஐகோர்ட் உள்ள வேல செய்யுற ஆபீஸர்ங்களுக்கு கூடைக்காரிங்க பெரிய பெரிய டிபன் காரியர்கள்ல சாப்பாடு கொண்டுபோவாங்க...எல்லாரும்சாப்பிட்ட பெறகு காரியரை எல்லாம் ஒரு மரத்தடிக்குக் கொண்டுபோய்,மீதிவெச்சிருக்கிறசாப்பாட்டையெல்லாம் ஒரு கதம்பமாக் கலந்து... ஓர் உருண்டை அம்பது காசுக்கு விப்பாங்க. அதையே நம்பி எத்தனை கூலிக்காரங்க இருக்காங்க தெரியுமா?

''இதுபோல இந்த ஜனங்க மத்தியில... உள்ள... உள்ள... போய்ப் பார்த்தம்னா என்னென்ன மாதிரியான விஷயமெல்லாம் இருக்கு தெரியுமா? ஊர்ல இருந்து வேலே தேடி வந்துட்டு, கையிலயும் காசு இல்லாம நான் பட்டேன் பாரு...ஒரு வேளைச் சாப்பாட்டுக்குன்னு செத்துப் பொழைக்கணும்!''

'பளார்.'

'இந்தச் சோத்துக்காக ஒவ்வொருத்தர் என்னமா பாடு பட்றுங்கன்னு உனக்குத் தெரியுமாடீ?'

''மாசிலாமணிக்கு நான் வந்த புதுசுல, சைக்கிள்ல மீன் கூடை கொண்டு போற வேலே. ஒரு நாளைக்கு அப்புடி இப்புடின்னு ஓர் அம்பது கிலோ மீட்டராவது மிதிக்கணும்... ஒரு மாசம் எனக்குச் சாப்பாடு போட்டாரு... ரோட்ல பசில விழுந்துட்ட என்ன அவர்தான் கூட்டிக்கிட்டுப் போயி... அவர் குடிசைலதான் இருந்தேன். அவரோட சம்சாரம், அப்பா ரெண்டு பேரும் நோயாளிங்க. ஒரு மாசத்துக்கு, மூணு வேளையும் நல்ல சாப்பாடு! நான் எவ்வளவோ சொல்லியும் கேக்கல! அப்புறமாத்தான் தெரிஞ்சுது எனக்கு மட்டும்தான் அப்புடின்னு... வெறும் தண்ணி சாதமும்... ரசம் சாதமும்தான் அவங்க சாப்பிட்டாங்க...''

'பளார்.'

'இப்ப எதுக்கு அவனே அடிச்சிங்களாம்? வாய்க்கு ருசியாவே சாப்பிட்ட புள்ள... ரசமும் பொறியலும் புடிக்கலேன்னு ஏதோ தூக்கி எறிஞ்சிட்டான்...'

''இப்ப பாவம்! அப்பாவும் செத்தாச்சி சம்சாரமும் செத்தாச்சி. கால் நரம்பு இழுத்துக்கிட்டு சைக்கிள் விட முடியாது.—சினிமா தியேட்டர்ல பிளாக்ல டிக்கெட் விக்கற வேலே! இப்ப நான் அவருக்கு வேண்டியதைக் கவனிச்சிக்கறேன்...

''என்ன? நான் பாட்டுக்குப் பேசி ரொம்ப போரடிச்சிட்டேனா? இதெல்லாம் லைஃப்ல ஒரு பாடம் மாதிரி இல்லியா? அதுக்குத்தான்...'

'என்னை மிருகத்தை அடிப்பது போல் கன்னத்தில் அறைந்த அப்பாவுக்குப் பாடம் கற்பிக்கவே நான் வீட்டை விட்டுப் போகிறேன்...'

''சிவா, இன்னிக்கே நான் அவசரமா ஊருக்குப் போகணும்... போயிட்டு ஒரு முக்கியமான காரியத்தை முடிச்சிட்டு, சீக்கிரமாத் திரும்பி வந்திடறேன். அப்புறமா எல்லாம் சுத்திப் பாக்கலாம்'' என்றான்.

''இதோ பார்... எனக்கு ரொம்ப நாளா யார் கிட்டயாவது மனம்விட்டுப் பேசணும், நாம் பட்டதை எல்லாம் சொல்லணும்னு இருந்ததுடா... அதுக்குத்தான்... நீ புரிஞ்சிக்குவேன்னுதான்...'

''நீ தப்பா நெனச்சிட்ட... நீ காட்டற கோணத்துல மெட்ராஸ் பாக்கத்தான் இப்ப எனக்கு ஆசையா இருக்கு . இப்ப நான் அவசரமா போகணும்.. வந்து விவர்மா சொல்றேன்'' என்றபடி சைக்கிள் காரியரில் எம்பி உட்கார்ந்தான் ரவி.

ரவி வீட்டிற்குள் நுழைந்தபோது —

அப்பா ஈஸிசேரில் சாய்ந்தபடி கூரையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

அம்மா சோகமே உருவாய்ப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள்.

ரவியைப் பார்த்ததும் துள்ளி எழுந்தாள்.

''என்னங்க...புள்ள வந்துட்டான்...புள்ள வந்துட்டாங்க'' என்றாள் முகம் மலர.

ரவி தலைகுனிந்தபடி நேராக அவனுடைய அறைக்குள் போய், பெட்டியை வைத்தான். அம்மா கூடவே வந்து புலம்பியபடி என்னென்னவோ பேசியது அவன் காதுகளில் விழவில்லை.

வேகமாய் லுங்கியை உடுத்திக் கொண்டு... கை கால் கழுவிக் கொண்டு... சமையலறையில் போய் உட்கார்ந்தான்.

அதுவரை பேசாமல் இருந்த தர்மராஜன் — நாக்கைப் பிடுங்கிக் கொள்வது போல் நாலு கேள்விகளைத் தயார் பண்ணிக் கொண்டு — சமையலறை வாசல் வரை வந்தவர் அப்படியே நின்று விட்டார்.

''ரசம் சாதம் போடும்மா... பசிக்குது..'' என்று ரவி அம்மாவிடம் கேட்டுக் கொண்டிருந்தான்.


வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்
Milk Bikis
BRITANNIA
Milk Bikis
சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.

# மாண்புமிகு முதலமைச்சர்

சருக்கம் — 29

## அரங்கேற்றம்!

எத்தனையோ திருவாதிரை நட்சத்திர நாட்களைப் பார்க்கலாம்; ஆனால் ஒரே ஒரு திருத்தொண்டர் புராண அரங்கேற்றத்தைத் தானே பார்க்க முடியும் என்பது போலச் சூரியன் ஜோதிமயமாய் உதயம் காண்கிறான்; வரலாற்றுப் புகழை வாழ்த்திக் கொண்டு பொன்னொளி பரப்புகிறான்.

தில்லை நடராசப் பெருமானின் கோயிலில் நடைபெறும் பூசனைகள், இதற்கு முன்னும் நடந்ததில்லை; இனிமேலும் நடக்கப் போவதில்லை என்பது போல ஏக அமர்க்களமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

சிவபெருமான் சந்நிதிக்கு முன் சேக்கிழார் பெருமானும் சோழப் பெருமானும் இணைந்து நின்று திருமுழுக்குகளையும் திருவாராதனைகளையும் இப்பிறவியில் பிறந்த பயன் போதும் என்பது போலக் கண்டு களித்துத் தரிசிக்கின்றனர்.

தொலைவில் அரச குடும்பம்.
இப்பால் ஜோதியும் வல்லரசியும்.
வழிபாடு நிறைகிறது.

முரசம் முழங்க, மங்கலவாத்தியங்களுடன் மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார் பெருமானை அழைத்து வருகிறார்கள்.





— கோவி. மணிசேகரன்

வெளியில் கூட்டமோ கூட்டம்.

அரங்கேற்றப் பந்தலில் சேக்கிழார் ஏறியமர்ந்ததும் கூட்டத்திலிருந்து எழுந்த வாழ்த்தொலிகள் அடங்கவே எத்தனையோ நேரம் பிடித்தது. வாழ்த்தொலிகள் அடங்கியதும் பட்டத்து யானையின் பிளிறல் சொல்லி வைத்தாற் போலக் கேட்கிறது.



"ஓம், பிரணவப் பொருளே!" என்று இருகரம் கூப்பி அரங்கில் அமருகிறார் சேக்கிழார். உடன் உதவ ஓலைநாயகம் வர, அவனைக் கூர்ந்து கவனித்த சேக்கிழார் "எங்கே ஜோதி?" என்கிறார். அதில் ஓர் அன்பான அதிகாரம் தொனிக்கிறது.

"இதோ இருக்கிறேன் சுவாமி!"

"அரங்கத்தில் எழுந்தருள்வாய் ஜோதி!"

ஜோதி மேடையில் ஏறுகிறாள்.

ஒரு பெண்தான் ஏறுகிறாளா? இல்லை... பூர்ணிமை நிலவுதான் ஏறுகிறதா?

ஐயம்எழுந்தவர்கள் 'ஐயனின் படைப்பில் இப்படி ஓர் அபூர்வமா?' என்று வியந்தனர். ஆனாலும் அவள் பிரபல நாட்டியக்காரி ஜோதி என்று தெரிந்த பிறகு கரவொலி எழுந்ததைப் பார்க்க வேண்டுமே!

ஒருவரும் தவறாக எண்ணவில்லை; எண்ணவும் முடியாது.

சேக்கிழார் தேர்ந்தெடுத்தச் சிறப்பு மிக்க மாணவி; திருத்தொண்டர் சேவகி என்றே எண்ணி மகிழ்ந்தனர்.

அரங்கத்து எதிர் வரிசையில் மாமன்னனும் அவர்தம் குடும்பமும். தமிழகத்தில் தமிழ் படித்த அனைத்துப் புலவர்களும் வருகை தந்திருந்தனர் என்றுதான் சொல்ல வேண்டும்.

பாண்டிய மன்னன் மாறவர்மன் சீவல்லபன் அனுப்பி இருந்த தமிழ்க் காணிக்கைகளை — ஒரு லட்சம் பொற்காசுகள் நிறைந்த பொற்கிழியை முதல் மரியாதையாகச் சோழ மாமன்னன் குலோத்துங்கன் எழுந்து வந்து அவையில் எடுத்துக் கூறி வழங்குகிற போது...

மக்கள் என்ன வாழ்த்தினர்? பாண்டியனையா வாழ்த்தினர்? தமிழ்ச்சங்கத்தை — முன்னம் சீரும் சிறப்புமாக இருந்த முச்சங்கத்தை வாழ்த்தி முழக்கம் செய்தனர்.

அரங்கேற்றம் ஆரம்பமாகிறது.

'உலகெலாம் உணர்ந்து ஓதுதற்கரியவன்' என்று வாழ்த்துப் பாடலைத் தொடங்குகிறார் வண்மைசேர் தமிழகத்து வண்டமிழ்ச்செல்வரான சேக்கிழார் பெருமானார்.

வாழ்த்து முதல் நூற் பெயர் வரை பாடி முடித்து, முதற் காண்டத்து முதல் சருக்கமான கையிலை மலைச் சிறப்பைக் கற்கண்டுத் தமிழில் பாடுகிறார்.

'பொன்னின் வெண்திரு நீறு புனைந்தென என்று தொடங்கிப் பாடுகிறார்.

முக்கனித் தமிழ் அந்த அரங்கத்தில் தேன் மாரிப் பொழிகிறது.

திருமலைச் சிறப்பு முடித்து, திருநாட்டுச் சிறப்பு முடித்து, திருநகரச் சிறப்பையும் முடித்தார்... அன்றைய அரங்கேற்றம் அத்துடன் முடிந்தது.

எங்கும் நமசிவாய எழுச்சிக் குரல்கள்.

அடுத்து இரவு வந்ததும் ஜோதியின் நடனம்.

தொண்டர் புராணம் புரியா பாமரர்க்கும் புரியச் செய்யும் தொண்டல்லவா ஜோதியின் திருநடனத் தொண்டு! இரவை எதிர் பாராதார் யார்?

இரவு நிலவாய்ப் பூக்கிறது.

நட்சத்திரங்கள் ஜோதியின் நடனத் திருப்பள்ளி பாடுகின்றன.

அரங்கில் விளக்குகளும், திடலில் தீப்பந்தங்களும் ஜோதி மயமாய்ப் பிரகாசிக்கின்றன.

குழல் இனிமையாய் ஒலிக்கிறது; திரை விலகுகிறது.

ஜோதியா இவள்!

நாளை, சேக்கிழார் பாடவிருக்கும் கதா

நாயகன் சுந்தரமூர்த்தி நாயனாரின் தடுத்தாட் கொண்ட புராணத்தில் வரும் ஜோதியாய் எழும் ஜோதியுள் ஜோதி' என்கிற வரிக்கு இம்மியும் பிறழாமல் ஜோதியாய்ப் பிரகா சிக்கிறாளே...!

காலையில் பாடிய மூன்று சிறப்புகளையும் ஒரு சிறப்பாய்க் கோத்து, முக்கிய வரிகளை நாட்டிய முத்திரையாக இசைத்து ஆடத் தொடங்குகிறாள், 'அம்பலவனே பெண் அவதாரம் பூண்டானோ' என்று அதிசயிக்கு மளவுக்கு!

சிறப்புக்களை வருணிக்கும் நாட்டியச் சிறப்பு நிறைகிறது.

ஜோதியின் நாட்டியச் சிறப்பும் இனி நாடெலாம் பரவும் என்பது போலப் பாராட் டுக்கள்.

மறுநாள் தடுத்தாட்கொண்ட புராணம்.

மந்திரத் தமிழில் பாடிய சுந்தரர் வாழ்க்கை யாயிற்றே!

சேக்கிழாரின் புராண உரையின் போது, சுந்தரரை அவர் எப்படியெல்லாம் எடுத்துப் புகன்றார்!

இந்தப் புகழ் மாலையை இரவு, ஜோதி தனது நாட்டியத்தில் அணிந்து ஆடிய போது...

ஜோதிதான் சுந்தரரா? இல்லை, சுந்தரரே ஜோதியாய் வந்து ஆடுகிறாரா?

காதல் கனிரசம் சொட்டச் சொட்ட ஆடு கிறாள் ஜோதி.

குறிப்பாக...

'நீதிமாதவர் நெஞ்சில் பொலிந்தன' என்ற பாடலில் வந்த 'ஜோதியாய் எழும் ஜோதி யுள் ஜோதி' என்ற வரிக்கு அவள் ஆடிய ஆட்டம்...

'ஆகா! ஆகா!' என்று சிலிர்த்தனர் அவை யோர்.

இந்த அபிநயங்களைத் தோற்கடித்தன, மூன்றும் நாள் தில்லை வாழ் அந்தணர் புரா ணத்து முதல் பாடலான 'ஆதியாய் நடுவு மாகி' எனத் தொடங்கும் பாடலுக்குப் பிடித்த அபிநயங்கள்!

அன்று ஓலைநாயகம் எடுத்துச் சொன்ன வரிகளாயிற்றே!

எடுத்த பாதத்தில் எண்திசை நடுங்க, இயற்றிய பாடலில் அவளே ஒடுங்க, தொடுத்த கரணத்தில் தோகை சிலிர்க்க, தொட்ட இடமெலாம் ஜோதி, ஜோதி, ஜோதி!

மன்னன் அநபாயன் மருண்டு ரசிக்கிறான்!

மாகவி சேக்கிழார் கண்ணீர் மல்குகிறார்!

தியாகவல்லியோ கூப்பித் தொழுகிறாள்!

திரண்ட மக்களோ திகைத்தனர்; சிலிர்த் தனர்; திணறினர்; திக்குமுக்காடினர்!

நாட்டியமா இது? நடராஜன் அவதாரம்!

ஒவ்வொரு நாளும் தமிழமுதம்; கலை யமுதம்! மக்கள் எங்கே உண்டனர்? எங்கே படுத்தனர்? அவர்களுக்கே தெரியாது. உண் டது தமிழில்! உறங்கியது நாட்டியத்தில் அல் லவா?

இது தொடர்ந்தது. இறுதியில் அரங் கேற்றம் இனிது நிறைந்தது.

மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார் பெருமானுக்கு ஞானமுடி சூட்டித் 'தொண் டர் சீர் பரவுவார்' என்ற மாபெரும் விருதை வழங்கி, இத்துடன் சிவனின் அருள் பெற்ற செம்மொழியாம் தமிழ் மொழியில் திருத் தொண்டர் புராணம் பாடியதால் 'அருள் மொழித் தேவர்' என்கிற சிறப்புப் பெயரை யும் வழங்குகிறான் அநபாய குலோத்துங்க சோழ மாமன்னன்.

இவனன்றோ சைவ சமயத்து அபயன்!

**அ**ன்று காலை...

சேக்கிழார் பெருமானை வாழ்த்திக் கொண்டே செஞ்ஞாயிறு உதயம் காண் கிறான்.

நிறைவு விழா...

பட்டத்து யானையின் மீது திருத்தொண்டர் புராண ஓலைச் சுவடிகளை வைக்கின்றனர். அம்பாரியாம் யானைத் தவிசில் மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார் பெருமானை அமர்த்தித் தானும் அமர்ந்து கொள்கிறான், 'இனியொரு பிறவி வேண்டேன்' என்றெண் ணிய அநபாய குலோத்துங்கன்.

அமர்ந்தவன் வெறுமனே அமரவில்லை. கவரி எடுத்துக் கவிஞர் பெருமானார்க்குக் களைப்பு நீங்க வீசுகிறான். முதலமைச்சர் தடுத் தால் கேட்கக் கூடியவனா? எந்த முதலமைச்ச ருக்கு இந்த மகிமை ஏற்பட்டது? எந்த முத லமைச்சர் இனி இந்த மாப்புகழைப் பெறப் போகிறார்?

உற்சாகமாகப் புறப்பட்டது ஊர்வலம்.

எங்கு நோக்கினும் மங்கல வாத்தியங்கள்!

எங்கு நோக்கினும் மாக்கடலின் அலைகள் போல மக்களின் தலைகள்!

எங்கு நோக்கினும் வானதிரும் வாழ்த் தொலிகள்!

ஊர்வலம் இனிது நிறைகிறது!

''ஜோதி! நீ என்னுடனிருக்கிறாய்! இந்த மாண்புமிகு பதவியை நான் என்றைக்கு வேண்டுமானாலும் கழற்றி வைக்கலாம்! கழற்றி வைக்க முடியாத பதவி சிவப் பதவி! எனவே இன்னும் சிறிது காலத்தில் நான் குன்றத்தூருக்கே சென்று விடுவேன்! அங்கே

''எலெக்ட்ரிக் பில் கட்டக் கொடுத்த பணத்தை ஆதாரத்தில் ... அப் போட்டு விட்டுட்டு வந்து நிக்கறீங் களே! வீட்டுல் விளக்கெரியாதுன்னு தெரிகிற அறிவு வேண்டாமா?''

''அந்த அறிவு இருந்துதான்டி மண்ணெண்ணெய் ஊத்தி விளக்கு வாங் கிட்டு வந்திருக்கேன்!''

— மணியம் சுப்பலிங்கம்





ரும் மேனி
கு ரெக்ஸோனா
Rexona
T AND GLOWING SKIN
REXONA
மின்னி மிளிரும் மேனி...எந்நாளும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.
சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.
ரெக்ஸோனா
உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிறது.
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.
LINTAS RX 90 2416 TM


பாம்பே டையிங்
பாம்பே டையிங்
வெகு நாகரீகமான
துணிகளுக்கு பெயர் பெற்றது
இந்த உண்மையை முற்றிலும்
தீபாவளியில் காணலாம்
தீபாவளிக்கென
இதோ வந்துவிட்டன!
நீங்களும் உங்கள்
குடும்பத்தினர் அனைவரும்
ஆவலுடன் அணிய
எதிர்பார்த்திருந்த நவீன
பாம்பேடையிங் ஃபேஷன்
துணி ரகங்கள். அனைத்தும்
புதியவை. தரத்தில்
சிறந்தவை. புடவைகள்
சூட்டிங்குகள்
சர்ட்டிங்குகள்
டிரஸ் பிரிண்ட்டுகளில்
புத்தம் புதிய டிசைன்கள்.
பாலியெஸ்டர், காட்டன்
துணிகளில் அதி நவீன
டிசைன்கள் அனைத்தும்
மில் நிச்சயித்த விலைகளில்
இதுவே
உங்களுக்கு
பாம்பே டையிங்
தரும்
உத்திரவாதம்.
உங்கள் சேவைக்கெனவே பாம்பே டையிங் 90க்கும் அதிகமான
ஷோரூம்களும், 750க்கும் அதிகமான டீலர்களையும் கொண்டதாகும்.
நினைவிருக்கட்டும்! நீங்கள் எங்கிருந்தாலும், உங்கள் அருகாமையிலேயே
ஒரு பாம்பே டையிங் துணிக்கடை உண்டு.
விநியோகஸ்தர்கள் : சிவ்ராம்ஸ் அசோசியேட்ஸ்/சிவ் சேல்ஸ்
கோவை-641 011 சென்னை-600 017.
Bankers: The Federal Bank Limited.
பாம்பே டையிங் BOMBAY DYEING



''என் கணவர் சரியான சந்தேகப் பிராணி!''

''எதனாலே, அப்படி சொல்றே?''

''என்னைப் பார்த்து குக்கர் விசிலடிக்குதுன்னு சந்தேகப்பட்டுக் குக்கரைப் போட்டு உடைச்சிட்டார்!''

— மணியன் தர்மலிங்கம்

எழுந்து கொண்டிருக்கும் திருநாகேச்சுரர் ஆலயத் திருப்பணிகள் முடிந்ததும், அதுவே எனது வாழ்வுப் பணியாக மாறும்! அப்போதெல்லாம் என்னுடன் தொண்டு புரியும் சிவநேசியாக இருப்பாயாக!''

சேக்கிழார், ஜோதியைப் பிரிய மனமில்லாமல் தேட்டுக் கொள்கிறார்.

அநபாய குலோத்துங்கனோ, ''அது வரை எனது அவையில் ராஜநர்த்தகியாக வீற்றிருப்பாய் ஜோதி!'' என்று இறைஞ்சுகிறான். தியாகவல்லியும் உடனிருந்து கெஞ்சுகிறாள்.

ஜோதி, ஜோதியாய்ச் சேக்கிழாரை நோக்கி முறுவலிக்கிறாள். 'இதுதான் என்னையே கொடுப்பேன் என்று தந்த வாக்குறுதியோ?' என்பது போல இருக்கிறது அந்தச் சுந்தரத் தமிழ்ச் சிரிப்பு.

''என்ன சிரிப்பு ஜோதி இது? என் ஆத்மாவைக் கொடுக்கிறேன். இதனிலும் பெரிது வேறுளதோ?''

''இல்லை சுவாமி, நிச்சயம் இல்லை! ஆனால் எனது முடிவு வேறு; இப்போதும் உங்களைத்தான் உடன் அழைத்துச் செல்கிறேன். இல்லை, பறித்துச் செல்கிறேன்!''

''ஜோதி!''

''உங்கள் திருத்தொண்டர் புராணச் சுவடிகளைச் சொல்லுகிறேன்! இதற்காகத்தான் இரண்டு படிவங்கள் இறக்கச் செய்தேன்! சுவாமி! நீங்கள் உங்களுடன் வர அழைக்கிறீர்கள்! மன்னரோ ராஜநர்த்தகி பதவிக்கு அழைக்கிறார்! இதுவல்ல என் தொண்டு. எனது தொண்டு, இந்தத் திருத்தொண்டர் புராணம் தேசமெலாம் பரவ வேண்டும் என்பது! இத்திருத்தொண்டர் புராணக் கதையை எனது நாட்டியத்தால் நாடு முழுவதும் பரப்புவேன்! இதுவே எனது தலையாய தொண்டாக ஏற்கிறேன்! மற்றவையெல்லாம்... போதும் சுவாமி, போதும்! போதும் என்கிற சொல்லின் புலம்பல் — பொருள் புரியும் என்று நினைக்கிறேன்!''

கண்ணீர் மடை திறந்து விடுகிறது.

சேலைத் தலைப்பால் துடைத்துக் கொள்கிறாள் ஜோதி.

தொடர்ந்து எவர் கண்களில்தாம் முத்துக்கள் அரும்பவில்லை?

''ஜோதி! நீ வேண்டுவன கேட்கலாம்!'' என்கிறான் குலோத்துங்கன்.

''நான் வேண்டுவன? இந்தச் சோழ சாம்ராஜ்யமே நானாக இருக்க, இனி என்ன வேண்டுவேன் சோழ மாமன்னா?''

குலோத்துங்கன் கண்களில் அதிகமாகவே முத்துக்கள் உதிரத் தொடங்கி விட்டன.

சேக்கிழார் செயல் மறந்து நிற்கிறார்.

''சுவாமி! ஓலைச்சுவடிகளை உங்கள் திருக்கரங்களால் அளிக்கலாமே!''

இனி அவளது போக்கினை, பயணத்தை எவராலும் தடுத்து நிறுத்த முடியாது என்றெண்ணிய சேக்கிழார், சுவடிகளைப் பொன்னாலான பெரிய தட்டில் வைத்து நீட்டுகிறார்.

ஜோதி அதனைப் பெறுகிற போது...

முதன் முறையாக அவளது செங்காந்தள் விரல்கள், செந்தமிழ் விரல்கள் மீது எதிர்பாராமல் பட்டுவிடுகின்றன. தொட்டு விடுகின்றன; தொடு உணர்வை அனுபவிக்கின்றன.

பனிமலர் மென்மையோ, இளங்குளிர்த் தன்மையோ என செந்தமிழ் விரல்கள் சிலிர்த்தன; போதுமே என்று குளிர்ந்தன; பின் நிலைத்தன.

செங்காந்தள் விரல்களோ...

சிலிர்த்தது மட்டுமல்லாது செயலிழந்தே போயின! அந்த ஒருகணத்தில் எங்கெல்லாமோ சென்றன; எப்படியெல்லாமோ அனுபவித்து விட்டன; போதாது, போதாது என்று புலம்பின.

தவத்தன்மை வேறு; பவத்தன்மை வேறல்லவா?

முத்துப் பல்லக்கு வெளியே ஆயத்தமாகக் காத்திருந்தது.

''வருகிறேன்! அனைவர்க்கும் சென்று வருகிறேன்! நான் எங்கும் சென்று விடவில்லை. சோழ நாட்டின் இதயங்களில்தான் இருக்கிறேன்!'' என்று கூறிப் புறப்படுகிறாள் ஜோதி! பின் தொடருகிறாள் வல்லரசி.

வெளிவாசலுக்கு வந்த வெண்ணிலா ஜோதி, அனைவருக்கும் கரம் கூப்புகிறாள். பின்னர்...

சேக்கிழார் பாதங்களை இம்முறை தொட்டே வணங்குகிறாள். இனி புதிய தொடு வுணர்வுக்கு என்ன இருக்கிறது?

''சுவாமி! பலருக்குச் சொன்னது போல 'வருகிறேன்' என்று உங்களுக்குச் சொல்ல மாட்டேன்! இருக்கிறேன்; என்றைக்கும் இருக்கிறேன்! ரேவதி நட்சத்திரம் இருக்கும் தோறும் இருக்கிறேன், இருக்கிறேன், இருந்து கொண்டே இருக்கிறேன்!''

ஜோதியின் கண்களில் சேக்கிழார் முத்துக்கள்; சேக்கிழார் கண்களில் ஜோதி முத்துக்கள்.

பல்லக்கு நோக்கி நடக்கிறாள் ஜோதி. அவளது சிலம்பொலி எல்லார் செவிகளிலும் நிறைகிறது.

(நிறைகிறது)

**கல்கி** 5.10.86 இதழில் 'நேருவின் உறுதி மொழி போதாது' என்ற தலையங்கத்தைப் படித்தேன். "ஆங்கிலம் மட்டுமே ஆட்சி மொழியாக இருக்கும் என்ற உறுதிமொழியை நாம் கோருகிறோம்" என்று எழுதி உள்ளீர்கள். இது மிகச் சிறந்த உயர்ந்த யோசனை ஆகும். இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு இதைவிடச் சிறந்த காரியம் இருக்க முடியாது.

ஆங்கிலேயர் இந்த நாட்டிற்கு வந்து சில வருடங்கள் ஆட்சி புரிந்து பின்பு நமக்கு விட்டுச் சென்ற செல்வங்களில் ஆங்கில மொழி மிகச் சிறந்த ஒன்று என்பது எனது கருத்து. தமிழ் மொழியின் மேல் ஆழ்ந்த பற்றில் நான் யாருக்கும் இளைத்தவனல்ல. ஆனால், ஆங்கிலமே ஆட்சி மொழியாகத் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதில் அசையாத நம்பிக்கை கொண்டுள்ளவன்.

நேருஜி கூறினார்:

1. "ஆங்கில மொழி இந்தியாவுக்கு ஒருக்காலும் அன்னிய மொழி அல்ல. இப்பொழுதுள்ள சூழ்நிலையில் ஆங்கில மொழி விலக்கப்பட மாட்டாது. ஆனால் நீடிக்கப்படும் என்றே நிச்சயமாகக் கருதுகிறேன்."

2. "மைய அரசு ஆங்கிலத்தைக் கட்டாயமாகப் பயன்படுத்த வேண்டியிருப்பதற்குக் காரணம், இந்தியாவில் எல்லாப் பகுதிகளிலும் உள்ள எல்லாப் பிரதிநிதிகளுக்கும் பொதுவான ஒரே மொழி ஆங்கிலம் என்பது தான். பொதுவாக எல்லோரும் புரிந்து கொள்ள வாய்ப்பான மொழி ஆங்கிலம்தான். இது கண்கூடு."

பேரறிஞர் அண்ணா 1963 மே மாதம் இராஜ்ய சபையில் நிகழ்த்திய சொற்பொழிவில் ஒரு பகுதி: "ஆங்கிலமே பயன்படுத்த வசதியானது என்பதோடு அம்மொழியைப் பயன்படுத்துவதால் ஏற்படக் கூடிய அனுகூலங்களையும் பிரதிகூலங்களையும் அனைத்து மக்களிடையேயும் சரிசமானமாகப் பகிர்ந்து அளிக்கக் கூடியதாகவும் அது விளங்குகிறது. எனவே ஆங்கிலத்துக்கே உயர்வான இடம் கொடுக்கப்பட வேண்டும்."

உயர்நீதிமன்ற நீதிபதி சக்ளா, தன்னுடைய தீர்ப்பு ஒன்றில் கூறி இருப்பதும் கருதற்பாலது: "ஆங்கிலம் ஓர் இந்திய மொழியே. சில விஷயங்களில் அநேக இந்திய மொழிகளைவிட அதிகமாக இந்தியத் தன்மை வாய்ந்த மொழி.

தேச விடுதலைக்காகப் பலமுறை சிறை சென்ற தியாகி என்ற முறையிலும் அரசியல் நிர்ணய சபையில் ஓர் உறுப்பினராக இருந்து அரசியல் சட்டத்தை வகுத்தவர்களில் ஒருவன் என்ற முறையிலும் இந்தி மொழி திணிக்கப்படக் கூடாது என்றும் ஆங்கிலமே மைய அரசின் அலுவலக மொழியாக இருந்து வரவேண்டியது, நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு உகந்தது என்றும் திட்டவட்டமாகக் கருதுகின்றேன். முதற்படியாக நேருஜியின் வாக்குறுதி அரசியல் சட்டத்தில் இடம்பெற வேண்டியது அவசரமும் அவசியமும் ஆகும். இதற்குத் தமிழக சட்டப்பேரவை உறுப்பினர்களும் நாடாளுமன்ற உறுப்பினர்களும் ஆவன செய்ய வேண்டுகிறேன்.

நயினார கரம்,

தியாகி எல். கிருஷ்ணசாமி பாரதி.

## கடனுக்கு வாங்கினாலும் கரிசனம் தேவை!

ஏராளமான நிறுவனங்களில் பணிபுரியும் எண்ணற்ற ஊழியர்கள் ஆண்டு தோறும் தீபாவளி, பொங்கல் பண்டிகைகளைச் சிறப்பாகக் கொண்டாட, கைத்தறி துணிகளைக் கடன் முறையில் பெற அரசு சலுகை அளித்துள்ளது. ஆனால் கைத்தறி கடைகளுக்குச் சென்றால், கடையில் பணிபுரியும் ஊழியர்கள் கடன் முறையில் துணி வாங்க வந்தவர்களை மதிப்பதே இல்லை. முகத்தைச் சுளிக்கிறார்கள். பொறுமை இல்லாது எரிந்து விழுகிறார்கள். அதனால் வேதனையுடன் திரும்ப வேண்டி இருக்கிறது. கடன் முறை சலுகையால்தான் பல கோடி ரூபாய்க்குத் தேங்கியுள்ள கைத்தறித் துணிகள் விற்பனை ஆகின்றது என்பதை அந்த ஊழியர்கள் தெரிந்து கொள்ளவில்லையே!

— க. அனுராதா, சென்னை — 28.

# ஒற்றுமைக்கு ஒரே வழி!

தர்ளா தலால்*
விளக்குகின்றார்



"சுவை மிகுந்த உண
தயாரிப்பது எப்படி?
அதுவும் சமைப்பதற்
முன்னமே"

உணவின் உண்மையான சுவை, நீங்கள் சமைப்பதற்கு முன் என்ன செய்கின்றீர்கள் என்பதை பொறுத்தது. சரியான பொருட்களை தேர்ந்தெடுப்பது— அதாவது, ஒவ்வொரு பொருளும் அதற்கே உரித்தான குணத்தையும், மணத்தையும் நிரம்பப பெற்றிருக்க வேண்டும். மசாலா பொருட்கள் ஒவ்வொன்றும் நல்ல வாசனையுள்ளதாக இருக்க வேண்டும். அரிசி நீளமான சம்பாவாக இருப்பது அவசியம். காய்கறிகள் உறுதியாகவும், செழுமையாகவும், சாறுமிக்கதாகவும் இருத்தல் வேண்டும். முக்கியமாக சமைக்கும் எண்ணெய், ஏனைய உணவு பதார்த்தங்களை சுவைமிக்கதாக்கும் வகையில் இருத்தல் வேண்டும். அதுவே ஸன்ஃப்ளவர் வனஸ்பதி. எனது இச்சமையற்குறிப்பை அதில் செய்து பாருங்கள்.

## மலபாரி கறி

### மஸாலா

½ மூடி துருவிய தேங்காய்.
1 மேஜைக்கரண்டி தனியா.
1½ தேக்கரண்டி சீரகம்.
3 துண்டு பட்டை லவங்கம்.
3 லவங்கம்.
3 மிளகு
5 துண்டு பூண்டு
10 காஷ்மீரி மிளகாய்
3 தேக்கரண்டி கசகசா.
1 பெரிய வெங்காயம் அரிந்தது.
1 தேக்கரண்டி ஸன்ஃப்ளவர் வனஸ்பதி



செய்முறை

1. ஸன்ஃப்ளவர் வனஸ்பதியைச் சூடாக்கி, அதில் மேற்சொன்ன பொருட்களை இரு நிமிடம் வறுத்தெடுக்கவும்.

2. சிறிது நீர் சேர்த்து, பசை போல் அரைத்துக்கொள்ளவும்.

கறி

2 பெரிய தக்காளி

2 கப் கலவையான, வேகவைத்த காய்கறிகள். (காரட், காலிப்ளவர், பச்சை பட்டாணி, பீன்ஸ், உருளைக் கிழங்கு)

1 மேஜைக் கரண்டி சுத்தமான பாலேடு

½ தேக்கரண்டி சக்கரை.

3 மேஜைக்கரண்டி ஸன்ஃப்ளவர் வனஸ்பதி (தேவையான உப்பு)

செய்முறை

1. தக்காளியை கடுநீரில் 10 நிமிடம் அமிழ்த்தி, கூழாக ஆக்கவும்.

2. ஸன்ஃப்ளவர் வனஸ்பதியை சூடாக்கி, (மேற்சொன்ன) அரைத்த மசாலாவை ஒரு நிமிடம் வறுத்தெடுக்கவும்.

3. தக்காளி, காய்கறிகள், ½ கப் தண்ணீர் இவற்றை சேர்த்து 4 நிமிடம் கொதிக்க விடவும்.

4. சக்கரை, பாலேடு, உப்பு சேர்க்கவும்.




ஸன்ஃப்ளவர் வனஸ்பதியை நெய்க்கு நான் உபயோகித்தது கண்டு வியப்படைகிறீர்கள் என்றால் நீங்கள் இன்னும் அதிக வியப்படையக் கூடும்—அதனுடைய பலன்களை பார்த்த பின்—நீங்களும் தான் முயன்று பாருங்களேன்.

* புகழ்பெற்ற சமையற்கலை நிபுணர்



WPL 2545

இதைவிடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.



ச்செக்ஸ், ஸ்ட்ரைப்ஸ் மற்றும் டெக்ஸ்சர்ஸ். மாதந் தோறும் நூற்றுக்கும் மேலான டிஸைன்கள்.

எக்ஸிக்யூட்டிவ் கலெக்ஷனிலிருந்து ஷர்ட்டிங்குகள்

**பாம்பே டையிங்**



## பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

**13**

ராயப்பேட்டை போலீஸ் ஸ்டேஷனைத் தாண்டியதும் ஆட்டோவை வேகம் குறைக்கச் சொன்னாள் பிரேமா. இடது பக்கம் தலைநீட்டிக் கட்டிடங்களைப் பார்த்துக் கொண்டே வுந்தாள்.

கடந்த பஸ் ஸ்டாப்பில் அலுவலகம் செல்லும் கும்பல் நாலு விநாடிக்கு ஒரு தடவை கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு நின்றது. ஹோட்டல் வாசலில் வரிசையாய் சைக்கிள்கள். துணிக் கடைகளின் வாசலில் மிஷின் போட்டிருந்த டைலர்கள் சுறுசுறுப்பாய் இருந்தார்கள். தியேட்டர் வெளியே பகல் காட்சி மலையாளப் படத்திற்காக நிகோடின் சுவாசித்துக் கொண்டு இளைஞர்கள்.

லட்சுமி ஜெராக்ஸ் முன்னே நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டாள். குனிந்து மீட்டர் பார்த்து, கைப்பையில் ஜிப் இழுத்துப் பணம் எடுத்துத் தந்தாள்.

முப்பதடி தள்ளி பைக்கை நிறுத்தின தாமஸ் எஞ்சினை அணைத்து, சாய்த்து நிறுத்திப் பூட்டிக் கொண்டான்.

பிரேமா அந்த ஜெராக்ஸ் கடைக்கு அருகில் 'குனிந்து செல்லவும்' என்று போர்டு மாட்டியிருந்த மாடிப் படிகளில் ஏறினாள். மேலே வரிசையாக ரூம்கள். முதல் அறையில் கேஸட் ரெக்கார்டிங் நடந்து கொண்டிருக்க... கடந்தாள். அடுத்ததில் ஓர் ஆர்க்கெஸ்ட்ராவின் போர்டு மாட்டியிருந்தது. உள்ளேயிருந்து தபலா சத்தம். அடுத்ததில் 'மாணிக்கம் — சேல்ஸ் டாக்ஸ் பிராக்டிஷனர்'. உள்ளே மூன்று மேஜைகள் போட்டுச் சாய்வாய் பேட் வைத்துக் கண்ணாடி போட்டவர்கள் எழுதிக் கொண்டிருந்தார்கள்.

அதற்கும் அடுத்த அறையின் வாசலில் பூட்டைப் பூட்டிக் கொண்டிருந்த கதிர் இவளைப் பார்த்ததும், "வாங்க பிரேமா" என்று பூட்டினதை மறுபடியும் திறந்தான். கதவை உள்புறமாகத் தள்ளி, "உள்ளே வாங்க" என்றான்.

பிரேமா ஒரு தடவை திரும்பிப் பார்த்தாள்.

அவளைத் தொடர்ந்து படிகளேறி மேலே வந்த தாமஸ் அவள் திரும்பிப் பார்த்ததும் சட்டென்று கேஸட்ஸ் ரெக்கார்டிங் செண்ட்டருக்குள் நுழைந்து, ''ஃபாரின் கேஸட் வச்சிருக்கீங்களா சார்?'' என்றான்.

பிரேமா கதிரைத் தொடர்ந்து உள்ளே வந்தாள்.

''நேத்து நான் வந்தேங்க. ரூம் பூட்டியிருந் திச்சு. ஆபீசுக்கு போன் செஞ்சேன். லீவுன்னு சொன்னாங்க. பேப்பர்ல அசோக் போட்டோ வையே போட்டுச் செய்தி வந்ததும் எனக்கு எதுவுமே புரியலீங்க. எங்கிருந்தாவ்து போன் செய்வார்ன்னு எதிர்பார்த்து ஏமாந்தது தான் மிச்சம். தண்ணி வச்சிருக்கீங்களா? பட படன்னு வருது.''

''மொதல்ல உக்காருங்க. விவரம் சொல் றேன்.''

கதிர் அறையின் மூலையில் மர ஸ்டாண்ட் வைத்து அதன்மேல் வைத்திருந்த சிங்கமுக மண் ஜக்கைச் சரித்துக் கண்ணாடி டம்ளரில் நீர் கொண்டு வந்து கொடுத்தான்.

வியர்த்துப் போயிருந்த பிரேமா மடமட வென்று குடித்துவிட்டு, ''சொல்லுங்க சார், உங்களுக்காவது தெரியுமா, எங்கே இருக் காருன்னு?'' என்றாள்.

தாமஸ் அந்தக்கடையிலிருந்து வெளிப் பட்டு கதிரின் அறைக்கு முன்னால் இருந்த அந்த ஆடிட்டர் அறைக்குள் நுழைந்து, ''இதானே மாணிக்கம்ங்கிற ஆடிட்டர் ரூமு?'' என்றான்.

''ஆமாம். என்ன வேணும்?''

''ஒண்ணும் வேணாம். என் ஃபிரண்டு ஒருத்தன் இங்கே என்னைக் காத்திருக்கச் சொன்னான். உக்காரலாமா?'' என்று ஸ்டூலை வாசலுக்கு மிக அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான்.

பக்கத்து அறையில் கதிரும், பிரேமாவும் பேசுவது ஓசை குறைவாக, கொஞ்சம் தெளிவில்லாமல் கேட்டது.

''போலீஸ் கிட்டேர்ந்து தப்பிச்சி நேரா என் ரூமுக்குத்தான் அசோக் வந்தான்'' என்றான் கதிர்.

''அப்புறம்?''

''ராத்திரி மட்டும்தான் தங்கினான்., காலை யிலே நான்தான் அவனுக்கு ஒரு வக்கீல் விலாசம் கொடுத்துப் போய்ப் பார்க்கச் சொன்னேன்.''

''அதாவது நேத்து.''

''ஆமாம். அதுக்கப்புறம் அவன் கிட்டேர்ந்து எனக்குத் தகவல் . இல்லே. ஒரு வேளை ஆபீசுக்கு போன் செஞ்சிருக்கலாம். நான் போகலே. குரோம்பேட்டையிலே என் சித்தி வீட்ல போய்த் தங்கிட்டேன். ஏன் தெரியுமா? அசோக்கோட ஃபிரெண்டு நான்ங்கிறதைத் தெரிஞ்சுக்கிட்டு மாத்தி மாத்தி மூணு போலீஸ் ஆபீசர்ஸ் வந்து விசாரிச்சுட்டுப் போய்ட்டாங்க. அந்தத் தொல்லையிலேர்ந்து விலகத்தான் லீவு போட் டேன்...''

''அந்த லாயருக்கு போன் செஞ்சி விசாரிக்கலாமே...''

''ரொம்பத் தப்பு. மஃப்டி போலீஸ் என்னைக் கண்காணிக்குது. குரோம் பேட்டை வரைக்கும் என்னை ஒரு கான்ஸ் டபிள் ஃபாலோ பண்ணினார்.

''என்னங்க கதிர் இப்படி ஆய்டுச்சி? நான் அப்பவே சொன்னேன். தனியா போக வேணாம்ன்னு. அசோக் கேக்கலே. ரொம்பப் பிரமாதமா சதி பண்ணிட்டாங்க.''

''உண்மையான குற்றவாளியை போலீஸ் பிடிச்சிட்டாங்கன்னா அசோக்குக்குப் பிரச்னையில்லே. இந்தத் தலைமறைவு அவசியமில்லே.''

''போலீஸ் முழுக்க முழுக்க இவரை மட்டும்தானே சந்தேகப்படுது. இதிலே இவர் தப்பிச்சது வேறே அவங்க யூகத்தை ஊர்ஜிதம் செய்யுதே...''

''அவனுக்கு வேறே வழியில்லேங்க அந்தச் சந்தர்ப்பத்திலே.''

''புரியுது. அசோக் இந்தக் குற்றத்தைச் செய்யலேன்னு நாம நம்பறதாலே நமக்குப் புரியுது. போலீசுக்குத் தெரியுமா அது? நான் அவரைப் பார்க்கணுங்க.''

''உங்களைக் கூட போலீஸ் கண்காணிக் கலாம் பிரேமா.''

''அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க. அப்படியே என்னை யாராச்சும் ஃபாலோ செஞ்சாலும் எப்படி டேக்கா கொடுக்கற துன்னு எனக்குத் தெரியும். சொல்லுங்க, யார் அந்த லாயர்?''

இவர்களின் பேச்சை விட்டு விட்டுக் காதில் வாங்கிக்கொண்டிருந்த தாமஸ் யார்



அந்தலாயர்என்றவார்த்தைகள்தெளிவாய்க் கேட்க.... கூர்மையானான்.

''பரத்னு பேரு. எனக்கே விலாசம் தெரியாது. போன் நம்பர் தான் தெரியும். இருங்க. குறிச்சித் தர்றேன். ஜாக்கிரதையா தொடர்பு கொள்ளுங்க. அசோக்கைச் சந்திக்கணுங்கிற ஆர்வத்திலே, அவனைக் காட்டிக் கொடுத்துடாதீங்க. அப்புறம் போலீஸ்கிட்டேர்ந்து அவன் விலகறது சாமான்யமில்லே.''

பிரேமா போன் நம்பர் குறித்த துண்டுச் சீட்டைப் பெற்றுக் கொண்டு, ''நான் வர்றேங்க,'' என்று எழுந்தாள்.

''என் ஆபீசுக்கு அப்புறமா போன் செய்றீங்களா?''

''அவசியம் பண்றேன்.''

பிரேமா வெளியே வந்து, அறைகளைக் கடந்து படிகளில் இறங்க....

தாமஸ் எழுந்தான்.

''என் ஃபிரெண்டுசுப்பன்னு பேரு. வந்தா இருக்கச் சொல்லுங்க. நான் ஒரு தம்மடிச்சுட்டு வந்துடறேன்'' என்று கூறி விட்டுத் தொடர்ந்தான்.

பிரேமாநடந்து,நடந்துபொதுத்தொலை பேசியை அடைந்தாள்.

உள்ளே நுழைந்து எண்களைச்சுழற்றினாள்.

''ஹலோ, லாயர் பரத் வீடா?''

''ஆமாம்'' என்றாள் சுசீலா.

''இருக்காரா?''

''இருக்கார். நீங்க யாரு?''

''என் பேரு பிரேமா. மிஸ்டர் பரத் கிட்டே ரொம்ப முக்கியமா பேசணும்.''

''ஒரு நிமிஷம்.''

''ஹலோ பரத் ஹியர்.''

''சார் நான் பிரேமா. உங்களை நேத்து வந்து சந்திச்சாரே அசோக், அவரோட மனைவியாகப் போகிறவள். அவர் அங்கே தான் இருக்காரா? நான் சந்திக்கணும். பேசணும். புறப்பட்டு வரட்டுமா? அவரோட இப்போ பேச முடியுமா?''

''இருங்க. இருங்க மேடம். நீங்க சொன்ன மாதிரி நேத்து அசோக்னு யாரும் என்னை வந்து சந்திக்கலே. வச்சிடவா?''

''சார், ப்ளீஸ், வச்சிடாதீங்க. கொலைக் குற்றவாளின்னு போலீஸ் சந்தேகப்படற அசோக் தப்பி வந்து கதிர்ங்கிற ஃபிரெண்டு கிட்டே உங்க அட்ரஸ் வாங்கிகிட்டு நேத்து சந்திக்க வந்தார். இப்போ நினைவிருக்கா?''

''ஸாரி மேடம். அப்படி யாரும் என்னைச் சந்திக்கலே.''

போன் வைக்கப்பட்டு விட, குழப்பமாக ரிசீவரையே பார்த்தாள் பிரேமா. பிறகு அதை வைத்துவிட்டு வெளியேறிப் பக்கத்து மளிகைக் கடையில் டெலிபோன் டைரக்டரி ஒசி கேட்டுப் பரத்தின் விலாசத்தைக் கண்டுபிடித்துக் குறித்துக் கொண்டாள்.

ஆட்டோவை அழைத்தாள்.

தாமஸ் விடாமல் மீண்டும் ஆட்டோவைப் பின் தொடர்ந்தான் சூயிங்கம் மென்று கொண்டே.

''ஏன் பரத் அப்படிச் சொன்னீங்க?'' என்றாள் சுசீலா.

''பேசினது யாரு?'' என்றான் அமர்ந்திருந்த அசோக்.

''பிரேமான்னு யாரையாவது தெரியுமா உங்களுக்கு?'' என்றான் பரத்.

''ஆமாம் சார். என்னோட வுட் பி. நாங்க உண்மையா, நேசிக்கிறோம்.''

''உங்க நேசிப்பு உண்மையா, போலியாங் கிறதெல்லாம் எனக்குத் தேவை இல்லாத விஷயம். இங்கே பாருங்க அசோக், இன்ஸ்பெக்டரைச் சந்திச்சுப் பேசினதிலே, ரெக்கார்ட்ஸ் பூரா படிச்சதிலே, நீங்க நிரபராதின்னு எனக்குள்ளே ஒலிக்குது. அதனாலே சட்டத்துக்குப் புறம்பா உங்களுக்கு உதவ முடிவு பண்ணியிருக்கேன். என்னோட முயற்சிகள் முடிவடைகிற வரைக்கும் நீங்க என் பொறுப்பிலே இருக்கீங்கங்கிற விஷயம் யாருக்கும் தெரிய வரதை நான் விரும்பலே — அவங்க உங்களுக்கு எவ்வளவு நெருக்கமான நபரா இருந்தாலும் சரி.''

''ரெண்டு நாளா என்னைச் சந்திக்காத தாலே பதறிப் போய்த் துடிச்சி இருக்கணும் பிரேமா. நான்பாதுகாப்பா இருக்கேன்னு தெரிஞ்சா அமைதி ஆயிடுவா.''

''அசோக், உங்க காதலைக் கொஞ்சம் மூட்டை கட்டி வையுங்க. நான் சொல்றதைக் கவனிங்க. உங்களை நேத்து ராத்திரி மட்டும் தான் இங்கே தங்க அனுமதிச்சேன். தொடர்ந்து என் வீட்டிலேயே உங்களை வச்சிருக்க முடியாது. அது உங்களுக்கும்





அவன்: நம்ம ராமசாமி கண்ணீர் விடறாரே... ஏன்?
இவன்: அவர் ஆரம்பிச்ச கிளிசரின் தயாரிக்கும் தொழிற்சாலையில் ஏகப்பட்ட நஷ்டமாம்!

— உ. ராஜாஜி.

ஆபத்து. எனக்கும் தொல்லை.''

''சார், என்னை வெளியே போகச் சொல்லிடாதீங்க சார். எனக்குப் பாது காப்பா வேற இடமே இல்லை. மறுபடி ஹோட்டல்களிலே தங்க முடியாது. கொத்திக்கிட்டுப் போக போலீஸ் தயாரா காத்திருக்கும்.''

சுசீலா பரத் முகததைச் சற்று கோப மாகப் பார்த்து, ''என்ன பரத், உதவி செய்றேன்னும் சொல்றீங்க. தங்க வைக்க மாட்டேன்னும் சொல்றீங்க. ஏன் அவரைத் த்ராட்டில்ல விடறீங்க...'' என்றாள்.

''இங்கே தங்க வேணும்னுதான் சொன்னேன். வேறே எங்கே தங்கறதுன்னு ஐடியாவும் வச்சிருக்கேன். அசோக், என் ஃபிரெண்டு ஒருத்தர் குடும்பத்தோட வெளிநாடு போயிருக்கார். வீட்டுச் சாவி என்கிட்டேதான் இருக்கு. வசதியான வீடு. அந்த வீட்டிலே ரெண்டு கண்டிஷன் பேரிலே உங்களைத் தங்க வைக்கப் போறேன்.''

''சொல்லுங்க, நீங்க சொல்றபடி நடந்துக்குவேன் சார்.''

''மூணு நாளைக்குத் தேவையான பழம், பிரெட், பிஸ்கெட் இப்படி வாங்கித் தர்றேன். வீட்டுக்கு உள்ளேயே இருக்கணும் நீங்க. ஒரு ஜன்னலைக் கூடத் திறக்கக் கூடாது. வெளில பூட்டு தொங்கும். கிட்டத்தட்ட சிறைதான் இது. ஆனா இதுதான் பாதுகாப்பு. உள்ளே போன் இருக்கு-நீங்க அதிலே உங்க காதலி கூடவோ, நண்பன் கூடவோ பேசக் கூடாது. போன் அடிச்சா எடுக்கக் கூடாது. ஒரு பூட்டப்பட்ட வீடு எப்படி இருக்குமோ, அப்படியே அந்தச் சுவடுகள் மாறும நீங்க உள்ளே இருக்கணும். படிக்க புக்ஸ் தர்றேன். ரேடியோ, டீ.வி. எதுவும் உபயோகிக்கக் கூடாது.''

''ஏன் பரத்? அவர் சுவாசிக்கலாமா? இல்லே அதுவும் கூடாதா?'' என்றாள் சுசீலா.

''சுசி, நான் சொல்றதெல்லாம் அவர் நன்மைக்காகத்தான்.''

''சார், எனக்குப் புரியுது. நீங்க சொன்ன திலே ஒரு இஞ்ச் கூடப் பிசகாம நான் நடந்துக்கறேன். இந்தக் கொலைப் பழியி லேர்ந்து என்னை வெளில எடுத்துச் சுதந் திரமா உலவ விடுங்க. அது போதும். அது வரைக்கும் இந்தத் தலைமறைவு வாழ்க்கை யை ஏத்துக்கறேன்.''

''உங்க சூட்கேஸை எடுத்துக்கங்க. என் னோட பைக்கிலே வர்றீங்க. உடனே அங்கே போறோம். சுசி, யாராச்சும் முக்கியமா வந்தா இருக்கச் சொல்லு, நான் வந்துடறேன். இவரை இறக்கி விட்டுட்டு'' என்றான் பரத்.

அவர்களிருவரும்புறப்பட்டுப்போனதும், ரெக்கார்ட் பிளேயரில் மைக்கேல் ஜாக் ஸனைச் சுழலவிட்டு, கால்மேல் காலணிந்து, தொடை தட்டி, கண் மூடி ரசிக்க ஆரம்பித் தாள் சுசீலா.

பத்தாவது நிமிடம் எழுந்து மெதுவாக ஆட ஆரம்பித்தவள் அழைப்பு மணிக்கு எரிச்சலுடன் சென்று கதவைத் திறந்தாள்.

''வணக்கம்'' என்றாள் பிரேமா.

''என்ன வேணும்?''

''மிஸ்டர் பரத் இருக்காரா? பேசணும். உள்ளே வரலாமா?''

''அவர் இல்லே. வெளில போயிருக்கார். உங்க பேரு?''

''பிரேமா.''

''கொஞ்சம் முன்னாடிதான் போன் செஞ் சீங்களே, பதில்தான் சொல்லியாச்சே. அப்புறம் என்ன நேரடி விசாரணையா? பரத் ஒரு தடவைக்கு மேல் பதில் சொல்ல மாட் டார்.''

''அப்படியா? இந்த சோபால உட்கார்ந்து அவர் வர்ற வரைக்கும் புஸ்தகம் படிச்சிக் கிட்டுக் காத்திருக்கிறதிலே உங்களுக்கு மறுப் பில்லையே?'' என்று தனது தோள் பையில் செருகி வைத்திருந்த வார இதழை எடுத்துக் கொண்டாள் பிரேமா.

''இதோ பாருங்க. வம்பு பண்ணாதீங்க. இதெல்லாம் அவருக்குப் பிடிக்காது.''

''பொய் பேசறது மட்டும் பிடிக்குமாக் கும்.''

''என்ன பொய்?''

''என் காதலர் அவரைச் சந்திக்கவே இல் லேன்னு சொன்னது பொய். அவரைச் சந்திக்க வந்திருக்கார் அசோக்.''

''நேத்து பூரா நானும் இங்கேதான் இருந் தேன். அப்படி யாரும் வரலேங்க. உங்க கிட்டே பொய் சொல்ல எங்களுக்கு என்ன அவசியம்?'' என்றாள் சுசீலா.

பற்கள் தெரியாமல் சிரித்தாள் பிரேமா.

தூரத்தில் பைக்கை நிறுத்திய தாமஸ் நடந்துவீட்டிற்கு அருகேவந்துவிட்டுஎண்ணை மனத்தில் குறித்துக் கொண்டு மறுபடி பைக் அருகே போய்க் காத்திருக்க...

''எதுக்கு இப்ப மோனாலிசா தங்கச்சி மாதிரி சிரிக்கறீங்க?''

''பொய் சொல்ல என்ன அவசியம்னு கேட்டீங்களே, சிரிப்பு வந்திச்சி.''

''இதிலே சிரிக்க என்ன இருக்கு?''

''சிரிக்காம என்ன செய்யறது? அசோக் குக்கு நான் பிரசண்ட் செஞ்ச கர்சீப் கால் முளைச்சி நடந்து வந்து உங்க வீட்டு சோபாவில் கிடக்க வேண்டிய அவசியம் என்ன? அதையாச்சும் சொல்லுங்க'' என்றாள் பிரேமா.

(தொடரும்)




ULKA-HCG-CT-1-86 TAM

# அட்டெஏஏஏன்ஷன்!

## இதோ,

# ஒரு வித்தியாசமான படம்!

இதுவரை திரைப்பட உலகில் யாருமே செய்திராத ஒரு சாதனையை ஓசைப்படாமல் செய்து வருகிறார் மலையூர் மம்பட்டியான் புகழ் தியாகராஜன்.

"எனக்குச் சிறு வயதில் ராணுவத்தில் சேர்ந்து பணியாற்றும் ஆசையிருந்தது. ஆனால் குடும்பச் சூழ்நிலை காரணமாக முடியவில்லை.

"சினிமாப் படங்களில் காதலில் தோல்வியுறுபவர்களும், உதவாக்கரைகளுமே ராணுவத்தில் சேருவதாகச் சித்திரிக்கிறார்கள். இது தவறு

"ராணுவ அதிகாரியொருவர் மாதம் ஆறாயிரம் வரை சம்பளம் பெற முடியும். வேறு எந்த இலாக்காவிலும் பாங்கிலும் கூட இது சாத்தியமில்லை. வேலையிலிருந்து ஓய்வு பெறும் போது பென்ஷனும், மாஜி ராணுவத்தினர் என்ற முறையில் வேறு வேலைகளில் சேரச் சலுகையும் உண்டு.

"தவிரவும் ராணுவக் கட்டுப்பாடு காரணமாக நோயில்லாத வாழ்க்கை வாழவும் அவர்களால் முடிகிறது. இந்தியாவின் பாதுகாப்புக்காக மட்டும் பட்ஜெட்டில் பெரும் பங்கு ஒதுக்கப்படுகிறது. வட இந்தியாவில் வீட்டுக்கு ஒருவர் ராணுவத்தில் பணிபுரிகிறார். ஆனால் ராணுவத்தில் பணிபுரியும் தமிழரோ அரை சதவீதம்தான்! சண்டை என்பது எப்போதாவது வருவதுதான். அதற்குப் பயந்து கொண்டுதான் பலர் ராணுவத்தில் சேருவதில்லை. பாருங்கள். இப்போது ராணுவத் தளபதியாக இருக்கும் சுந்தர்ஜி ஒரு தமிழர். இதில் நமக்குப் பெருமையில்லையா?" என்று ராணுவ மகிமை பற்றி ஒரு குட்டிப் பிரசங்கமே செய்தார் நடிகர் தியாகராஜன்.



எந்த ராணுவத்தில் அவர் சேர முடியவில்லையோ, அதே ராணுவத்தினைப் பற்றி ஒரு கதை எழுதித் தமிழில் திரைப்படமாகத் தயாரித்துக் கொண்டிருக்கிறார் இவர்.

படத்தின் பெயர்: "பூவுக்குள் பூகம்பம்."

"ஆறு மாதங்களுக்கு முன்பு நமது ராணுவத் தளபதி சுந்தர்ஜி, "எனது கரத்தினை வலுப்படுத்துங்கள்" என்று பிரசங்கம் செய்தார். அந்தச் செய்தியைப் படித்ததும் என் மனத்தில் ஓர் மின்னல். உடனே மளமளவென்று எனது திரைப்படக் கதையை எழுதினேன்" என்று பெருமையுடன் கூறுகிறார் தியாகராஜன். இப்படத்தின் கதை, திரைக்கதை, தயாரிப்பு, இயக்கம் எல்லாமே இவர்தான்.

தில்லியில் கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் முயன்று ராணுவ அதிகாரிகளின் அனுமதி பெற்று நிஜ லொகேஷன்களிலேயே படத்தினை எடுத்து வருகிறார் இவர்.

சமீபத்தில் பெரும் சர்ச்சைக்கு உள்ளான "ராம் ஜனன பூமி"யான ஃபைஸாபாத் (Faisabad) அருகே உள்ள ஒரு ராணுவ முகாமில் கிட்டத்தட்ட மூவாயிரத்து ஐந்நூறு வீரர்களுடன் தங்கி, படப்பிடிப்பினை நடத்தியுள்ளார் தியாகராஜன். ராமர் அவதரித்த பூமி எனச் சொல்லப்படும் இப்பகுதி யாருக்குச் சொந்தம் என்பதில் இப்போது இந்து — முஸ்லிம் வகுப்பினரிடையே தகராறு இருந்து வருகிறது. ராமர் இறங்கிய சரயு நதி படத்தில் இடம் பெறுகிறது. ராணுவ உடை



அணிந்து நடப்பது, சல்யூட் அடிப்பது, போரிடுவது எல்லாமே அசல் ராணுவ வீரர்களுடன் சேர்ந்து பயிற்சி பெற்றுச் செய்திருக்கிறார் தியாகராஜன். படத்தில் அசல் டாங்குகளும் மற்ற தளவாடங்களும் பயன்படுத்தப்படுவதுடன் அசல் ராணுவ வீரர்களும் நடிக்கிறார்கள். ராணுவ வீரர்களைப் போல ஹேர் ஸ்டைலையும் மாற்றிக் கொண்டிருப்பதைக் காட்டினார் தியாகராஜன்.

சமீபத்தில் பரங்கிமலையில் ராணுவ வீரர்கள் பாராசூட்டிலிருந்து குதிப்பதில் சாகசங்கள் செய்ததை நாளிதழ்களில் படித்தோமல்லவா? அதையும் தியாகராஜன் விட்டு வைக்கவில்லை. படமாக்கிவிட்டார். தவிர புதுதில்லியிலும் பல முக்கிய ராணுவக் கேந்திரங்களில் படமெடுக்கும் அனுமதியினைப் பெற்றுள்ளார்.

"பூ மாதிரி உள்ள ஒரு பெண், மனத்தில் பூகம்பத்துடன் வாழ்வதுதான் கதைக் கரு. இப்படத்தில் இந்தி நடிகை குஷ்பூ என்னுடன் கதாநாயகியாக நடிக்கிறார். தவிர செளகார் ஜானகி, சிலுக்கு, சரண்ராஜ், ஜனகராஜ் முதலியோரும் இப்படத்தில் உண்டு" என்ற தியாகராஜன் "இனி வெளியார் படங்களில் அதிகம் நடிக்காமல் இம்மாதிரி புதுமைப் படங்களை நானே தயாரித்து வெளியிடப் போகிறேன்" என்று பெருமையுடன் குறிப்பிட்டார்!

— மன்னை செளரிராஜன்



# ஒருவரையொருவர்...

**அய்க்கண்**

இன்னும் இரண்டு மாதங்களில் எனக்குத் திருமணம் முடிந்த பிறகுதான், ஒரு வீடு தேவை. என்றூலும், நல்ல வீடு கிடைக்கும்போது விட்டுவிடக் கூடாது என்று நண்பர்கள் சொன்னதால், அந்த வீட்டுக்கு அட்வான்ஸ் கொடுத்து, சென்ற மாதம் முதல் தேதியே அந்த வீட்டுக்குக் குடி வந்துவிட்டேன்.

ஒரு 'சிவப்பு முக்கோணக்' குடும்பத்திற்குப் போதுமான இடவசதி. வீட்டுக்கு முன்னுல் கொஞ்சம் காலியிடமும், பின்பக்கம் சிறு தோட்டம் போடக் கூடிய அளவுக்கு இடமும் இருந்தன. எனக்கு முன்பே அந்த வீட்டில் குடியிருந்தவர்கள் வைத்து வளர்த்துவிட்ட மா, கொய்யா, வாழை மரங்கள் சிலவும் பூச்செடிகள் சிலவும் பின்பக்கத்துத் தோட்டத்தில் இருந்தன. அங்கே, மாலை நேரங்களில் ஈஸி சேர் போட்டுக் கொண்டு, புத்தகங்கள் படிப்பேன்.

என் வீட்டுக்கு வலதுபுறம் உள்ள வீட்டில், ஒரு தம்பதிகள் — திருமணமாகி இரண்டு மூன்று ஆண்டுகள் ஆகிறதாம் — இருந்தார்கள். குழந்தைகள் இல்லை. ஆனுல், குழந்தைகள் இல்லாத குறை தெரியாதபடி, வீடு எப்போதும் கலகல என்றிருக்கும்.

கணவன் — மனைவி இருவரும் எப்போதும் கொஞ்சிப் பேசிச் சிரித்து மகிழ்வது, என் வீட்டுக்கே கேட்கும். டூயட் பாடாதது ஒன்றுதான் குறை! மற்றபடி, கூட்டுக்குள் சிட்டுக் குருவிகள் கிசுகிசு என்று கொஞ்சிக் கொள்வது போல், அந்த வீட்டுக்குள் எப்போதும் சம்சார சங்கீதம்தான்!

தினசரி இருவரும் அதிகாலையில் எழுந்து, வீட்டு வேலைகளை சேர்ந்தே முடித்து விட்டு, அலுவலகங்களுக்குப் புறப்படுவார்கள்.

முனிஸிபாலிடி தண்ணீர் வராத நேரங்களில், மற்ற வீட்டுப் பெண்கள் குடங்களைத் தூக்கிக் கொண்டு, பக்கத்துத் தெருவிலிருக்கும் பொதுத் தண்ணீர்க் கிணற்றில் இறைத்து வருவார்கள். இந்த வீட்டில், கணவனே சைக்கிளில் குடத்தைக் கட்டிக் கொண்டு போய், கிணற்றில் தண்ணீர் இறைத்துக் கொண்டு வருவார். காய்கறி நறுக்குவது, வீட்டைச் சுத்தம் செய்வது, துணிமணிகள் துவைப்பது முதலிய வேலைகளில் கணிசமான பங்கு எடுத்துக் கொள்வார் அவர்.

காலையில் சமையல் முடித்துச் சாப்பிட்டுவிட்டு, டிபன் பாக்ஸ்களுடன் ஸ்கூட்டரில் புறப்பட்டுப் போவார்கள். அந்தக் கணவருக்கு, ஒரு கம்பெனியில் சேல்ஸ் மானேஜர் வேலையாம். மனைவிக்கு ஒரு பாங்கில் உத்தியோகம். மாலையில் இருவரும் சேர்ந்தே ஸ்கூட்டரில் வீடு திரும்புவார்கள்.

வீடு வந்ததும், டிபன் காப்பி தயாரித்துச் சாப்பிட்டுவிட்டு, தோட்டத்தில் ஆளுக்கு ஒரு ஈஸிசேரில் உட்கார்ந்து அவர்கள் பேசிக் கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன்.

நான் முழுவதும் அப்படிக் கொஞ்சிக் கொஞ்சிப் பேசுவதற்கு என்னதான் விஷயம் இருக்குமோ என்று நான் ஆச்சரியப்படுவேன்.

சில நாட்களில் இருவரும் சினிமாவுக்குப் போவார்கள். சினிமா, நாடகம் என்று வெளியே போனுல், இரவுச் சாப்பாட்டை எங்காவது ஒரு ஹோட்டலில் முடித்துக் கொண்டுதான் வீட்டுக்கு வருவார்கள்.

அந்த அன்புமயமான குடும்ப வாழ்க்கை எனக்கு ஓர் ஆதர்ஸமாக விளங்கியது.

குடும்பம் என்றுல் ஏதோ ஒரு பெரிய சுமை, பெரிய துயர சாகரம் என்றெல்லாம் அபிப்பிராயம் வைத்திருந்த நான், தாய், தந்தை வற்புறுத்தலுக்காகத்தான், திருமணத்திற்குச் சம்மதம் தெரிவித்திருந்தேன்.

பக்கத்து வீட்டுக் குடும்ப வாழ்க்கையைப் பார்த்த பிறகு, இல்லற வாழ்க்கையை இவ்வளவு இனிமையாகக் கூட அமைத்துக் கொள்ள முடியும் என்று புரிய ஆரம்பித்திருந்தது எனக்கு. என் திருமண நாளை ஆவலோடு எதிர்பார்த்து, தினசரி காலண்டரின் தாள்களை வேகமாகக் கிழித்தெறிந்து கொண்டிருந்தேன்.

வலதுபுற வீட்டுக்கு எதிர்மாருக இருந்தது இடது புறத்து வீட்டில் இருந்த குடும்பம்.

அங்கேயிருந்தும் அடிக்கடி பேச்சுச் சப்தம் கேட்கும். ஆனுல், அதிலே எப்போதும் பெண் குரல்தான் உரத்துக் கேட்கும். ஆண் குரல் பலஹீனமான ஸ்தாயியில் ஆரம்பித்துச் சிறிது நேரத்தில் அதுவும் நின்றுவிடும். அந்தக் குடும்பத்திலும் கணவன் — மனைவிதான்; குழந்தை இல்லை.

அந்த வீட்டில் இருப்பவர், கவிஞர் மெய்யப்பன் என்று என் நண்பன் மூலம் தெரிந்ததும், அந்த வீட்டின்மேல் எனக்கு ஒரு தனி சுவாரஸ்யம் ஏற்பட்டிருந்தது.

கவிதைகளிலே அக்னியாக, முரசாக, சாட்டையாக முழங்கும் மெய்யப்பன், வீட்டுக்குள் ஏன் இவ்வளவு பலஹீனமாக இருக்கிருர் என்று ஆச்சரியப்படுவேன்.

'ராதா...! ராதா...!' என்று அடிக்கடி அவர் அன்பு பொங்க அழைக்கும் குரல், என் காதில் விழும். ஆனுல், அந்த ராதா அவரிடம் பேசும் — பேச்சா அது? — கூச்சலிடும் சத்தம் எனக்கே தாங்க முடியாத ஆத்திரத்தை உண்டாக்கும்.

அவர் சொல்வதற்கெல்லாம், ராதாவிடமிருந்து சிடுசிடு என்றுதான் பதில் வரும்.

"ராதா...! பைப்பில் தண்ணீர் வருது... நீ போய்க் குளியேன்..." என்று பரிவோடு சொல்வார் மெய்யப்பன்.

"ஏங்க இப்படிப் பறக்கிறீங்க? பாத்ருமிலே தண்ணி எவ்வளவு நேரத்துக்கு வரும்னு உங்களுக்குத் தெரியுமா? பாதி குளிச்சுக்கிட்டிருக்கிற போது, தண்ணி நின்னு போயிட்டா என்ன பண்ணுறது? நீங்க தண்ணி எடுத்துக்கிட்டு வந்து தருவீங்களா...? என்னைக் குளின்னு அனுப்பிட்டு, பேப்பரிலே ஏதாச்சும் கிறுக்க ஆரம்பிச்சிடுவீங்க... எனக்குத் தெரியாதா உங்க லட்சணம்?" என்று மடமடவென்று சூடான வார்த்தைகளை அருவியாகக் கொட்டுவாள் ராதா.

எனக்கு ஆச்சரியமாயிருக்கும். கணவன் இப்போது என்ன சொல்லிவிட்டான் என்று இப்படி பிலுபிலு என்று சண்டை போட்டுக் கத்துகிறுள் என்று எனக்குப் புரியாது...

ராதாவின் கூச்சலைவிட, மெய்யப்பனின் மௌனம் இன்னும் ஆச்சரியமாயிருக்கும் எனக்கு.

சில சமயங்களில் "ராதா! நேத்து வாங்கிக்கிட்டு வந்தேனே வெண்டைக்காய். அதை மிளகுத் தூள் போட்டு வதக்கி வையேன்; நல்லாயிருக்கும்." என்று ஆசையோடு சொல்வார் மெய்யப்பன்.

அவ்வளவுதான். முற்றிய கறிகாய்களை வாங்கி வந்ததற்காக வசவு வார்த்தைகளைப் போட்டு அவரை வதக்கி வறுத்து விடுவாள் ராதா.

உலக விஷயங்களில் தன் கணவனை விட, மற்றவர்கள் எல்லோருமே கெட்டிக்காரர்கள் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை அவளுக்கு.

அப்படியே, மற்றவர்களைவிட, அவர் அந்த விஷயங்களில் முட்டாளாயிருந்தால் தான் என்ன? நெஞ்சையள்ளும் அற்புதமான கவிதைகளை எழுதும் கவிஞரல்லவா அவர்?

அதே சமயத்தில், அந்தச் சூழ்நிலையில், மெய்யப்பன் எப்படி இத்தனை அருமையான கவிதைகளை எழுதுகிருர்? என்றும் ஆச்சரியப்படுவேன். ஒருவேளை, தாம் வேலை பார்க்கும் சிட் ஃபண்ட் அலுவலகத்திலேயே ஓய்வு நேரத்தில் எழுதுவாரோ...?

சில நாட்களில், அவரோடு பேசும் சந்தர்ப்பம் கிடைத்த போது, நான் அவரிடம் கேட்ட முதல் கேள்வி இதுதான்.

"ஸார்! உங்கள் கவிதைகளையெல்லாம் படிச்சு ரசிச்சிருக்கேன். ரொம்ப அருமையான கவிதைகள்... ஆனல் எனக்கு ஒரு சந்தேகம் — கேட்கலாமா ஸார்?" என்று தயக்கத்தோடு கேட்டேன் நான்?

"சந்தேகமா...? அந்தக் கவிதைகளையெல்லாம் நான்தான் எழுதினேனுன்னு சந்தேகமா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார் அவர்.

"நோ... நோ... அப்படியில்லை... உங்க வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் இருக்கிறவன்



தானே நான்...? உங்க வீட்டிலே... ஏற்படற சப்தத்திலே... கூச்சலிலே... கவிதை எழுதற மூட் எப்படி உங்களுக்கு வருதுன்னு...

"ஓ! அதுவா? பூனை இருக்கிற வீட்டிலே தானே எலி பேரன் பேத்தியெடுக்குது...?" என்று கடகடவென்று வாய்விட்டுச் சிரித்தார் கவிஞர்.

அடுத்த வாரம் ஒரு நாள் மாலை —

திடீரென்று கணவனும் மனைவியும் உரத்த குரலில் கூச்சல் போட்டுச் சண்டையிடும் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு வெளியே வந்தேன் நான்.

சப்தம் வந்தது, இடது பக்கத்து வீட்டிலிருந்து அல்ல — வலது பக்க வீட்டிலிருந்து!

"நோ யூ ஆர் எ சீட்... துரோகம் செஞ்சிட்டீங்க... இத்தனை நாளும் என்னை ஏமாத்திட்டீங்க... நீங்க இப்படிப்பட்ட அயோக்கியரா யிருப்பீங்கன்னு நான் நினைக்கலே...", என்று பெண்புலியாய்ச் சீறிக் கொண்டிருந்தாள் அந்த வீட்டுக் குடும்பத் தலைவி.

எப்போதும், இனிய குரலும் கொஞ்சலுமாகப் பேசும் அந்தப் பெண்ணிடமிருந்தா, இத்தனை காட்டுக் கூச்சல்?... என்னால் நம்ப முடியவில்லை.

'நான்கு சுவர்களுக்குள் நடக்கும் குடும்ப விவகாரம்' என்று ஒதுக்கிவிட முடியாமல், காலனி முழுவதும் வெடித்து வெளி வந்துவிட்ட அந்தச் சண்டையைத் தீர்த்து வைக்க, பக்கத்து வீட்டுக்காரர்கள் சிலர், அந்த வீட்டுக்கு முன்னால் வந்து கூடிவிட்டார்கள்.

"மிஸ்டர் ர்ாமு! கொஞ்சம் அமைதியாயிருங்க... டோன்ட் கெட் எக்ஸைட்டட்... உணர்ச்சிவசப்படாதீங்க... கண்ட்ரோல் யுவர் ஸெல்ஃப்..." என்று அந்தக் கணவனை ஆதரவாகக் கையைப் பிடித்து உட்கார வைத்தார் கவிஞர் மெய்யப்பன்.

"ஸார்! நீங்களே கேளுங்க, ஸார்! இந்த அநியாயத்தை..." என்று, சற்றே அமைதியடைந்து, நடந்ததைச் சொல்ல ஆரம்பித்தான் ராமு.

அடுத்த அறைக்குள்ளே போன ராமுவின் மனைவி, ஒரு சூட்கேஸை எடுத்துப் பிரித்து, அதற்குள் புடைவை துணிமணிகளைத் திணித்துக் கொண்டே, அழுது புலம்பிக் கொண்டிருந்தாள்.

அன்று — ராமுவின் அலுவலகத்தில் திடீர் என்று ஆடிட்டர்கள் வந்துவிட்டார்களாம். அந்த ஆடிட்டர்களின் கெடுபிடியில் தளர்ந்து போன ராமுவுக்கு, மேலும் ஒரு நெருக்கடி.

அவர்களுடைய கம்பெனித்தயாரிப்பு ஒன்றின் விளம்பரத்துக்காக, ஆண் — பெண் மாடல்கள் இரண்டு பேர் போஸ் கொடுக்க அன்று நாள் குறித்திருந்தார் தொழில்முறைப் புகைப்படக்காரர் ஒருவர்.

கம்பெனி அலுவலகத்தின் முன் வாசல் தோட்டத்தையே பின்னணியாக வைத்துப் 'புகைப்படம்' எடுக்க, போட்டோகிராபர் ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்தார்.

போட்டோவுக்கான 'மாடல்' பெண் வந்து விட்டாள். ஆனால் மாடல் ஆண் வரக் காணோம்.

அந்த 'ஆண் மாட'லுக்காக வெகுநேரம் காத்திருந்து, எல்லோரும் பொறுமையிழந்து விட்டார்கள்.

சட்டென்று ஒரு யோசனை தோன்றியது போட்டோகிராபருக்கு.

"ஏன் ஸார்! நீங்களே ஆண் மாடலாக போஸ் கொடுத்தால் என்ன...? உங்களுக்கு அருமையான போட்டோஜெனிக் ஃபேஸ் இருக்கு ஸார்!" என்று ராமுவிடம் கூறினார் அவர்.

அலுவலகத்தில் மற்றவர்களும் அந்த யோசனையை ஆமோதித்தார்கள். வேறு வழியில்லாமல், ராமு அந்த 'மாடல்' விளம்பரத்துக்காக நெருக்கமாக இணைந்து 'போஸ்' கொடுத்தான்.

அன்று வெகுநேரம் கழித்துத்தான் அவன் வீடு திரும்ப முடிந்தது.

ஆடிட்டிங் நெருக்கடியும், விளம்பரப் படப்பிடிப்பு அலுப்புமாகச் சேர்ந்து, அவனை மிகவும் சோர்வடையச் செய்து விட்டன.

கணவன் கலகலப்பாக இல்லாததால், தானும் உற்சாகமிழந்தவளாய் விட்ட ரேகா, தற்செயலாக அவன் கழற்றிப் போட்டிருந்த சட்டையைக் கவனிக்க, அதிலே ஒரு நீண்ட தலைமுடி — பெண்ணின் கூந்தல் — ஒட்டியிருந்தது.

திடுக்கிட்டுப் போன அவள், சட்டையை இன்னும் அருகே எடுத்துப் பார்த்த போது — ஒரு புதிய ஸென்ட், பவுடர் வாசனை கமகமத்தது!

அவ்வளவுதான் — ரேகா குமுறிப் பொங்கி விட்டாள்.

"யாரோ ஒருத்தி வீட்டுக்குப் போய் ஜாலியாய் இருந்திட்டு, திடீர் ஆடிட், அப்படி இப்படின்னு சொல்லி ஏமாத்துறீங்களா?"

திகைத்துப் போன ராமு, நடந்ததைச் சொன்னான். ஆனால் அவள் முற்றிலும் நம்பத் தயாராயில்லை.

"போட்டோவுக்கு வந்தவள் பவுடர் போட்டிருந்தாள்னு சரி... ஸென்ட் ஏன் போட்டுக்கிட்டு வர்றா? போட்டோவிலே ஸென்ட் மணக்குமா?" என்று குறுக்குக் கேள்வி கேட்டு மடக்கினாள் ரேகா.

ராமு திருதிரு என்று விழித்தான்.

அடுத்த அறைக்குள் துணிமணிகளை எடுத்துக் கொண்டிருந்த ரேகா, சூட்கேஸுடன் வெளியே வந்தாள்.

"இனிமே அந்த 'மாடலை' இங்கேயே கூட்டி வந்து குடித்தனம் பண்ணுங்க... நான் போறேன்..." என்று குமுறினாள் அவள்.

"என்னம்மா, ப்ளீஸ், கொஞ்சம் நான் சொல்றதைக் கேளுங்க. ராமு சொல்றதைப் பார்த்தா, தப்பாய் ஒண்ணும் நடந்ததாகத் தெரியலே..." என்று மெய்யப்பன் ரேகாவைச் சமாதானப்படுத்த முயன்றார்.

"இல்லீங்க... அவர் சொல்றது அத்தனையும் கதை, கற்பனைக் கதை... நீங்க கவிஞர்... அவர் சொல்ற கற்பனையை நம்பிடுவீங்க.

# வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் சுயமான பார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.

வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




B84.55 Tam

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்**
**பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !**

சுவையோ சுவை! வகையோ வகை!
சமைத்துப் பாருங்கள்

# 7ஸ்டார் சேமியாவில்

## இட்லி, வடை, புலவு, உப்புமா, பாயசம்

தனிருசி.... பேரின்பம்.



பூப் போன்ற இட்லி, கரகரவெனும் வடை, சுவைமிகு புலவு, இனிய பாயசம், மேலும் போண்டா, உப்புமா, பக்கோடா, கட்லெட், சாக்லெட் புட்டிங் அனைத்தும் 7ஸ்டார் சேமியா கொண்டு தயாரிக்கலாம். 7ஸ்டார் சேமியா உணவு வகைகளுக்கு மேலும் சுவையூட்டுகிறது. சுவைமட்டுமல்ல. அதிகப்படியான ஊட்டச் சத்தும் அளிக்கிறது.

இன்றே 7ஸ்டார் சேமியாவில் வகை வகையான பண்டங்களை சமைத்து மகிழுங்கள்.




## 7ஸ்டார்

சிறந்ததோர் சேமியா !

இந்திய பாரம்பரியம்.
இத்தாலிய தொழில்
நுணுக்கம்.

தயாரிப்பாளர்:
செவன் ஸ்டார் புட் ப்ராடக்ட்ஸ்

CLARION/SS/8642 TAM

# மாதம் ஒரு மாவட்டம்

# கோவை



கல்கி வாசகர்களின் கடிதங்களின் அடிப்படையில் நமது நிருபர்கள் தற்போது கோவை மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சேகரித்த தகவல்களின் அடிப்படையில் கட்டுரைகள், புகைப்படங்கள், கலெக்டர் பேட்டி முதலியன நவம்பர் 16, 23 இதழ்களில் இடம் பெறும்.

— ஆசிரியர், கல்கி

---

நான் நம்பத் தயாராயில்லை... நான் எங்கப்பா வீட்டுக்குப் போறேன்...'' என்று பிடிவாதமாகச் சொல்லி விட்டாள் ரேகா.

அவள் கோபம் அடங்குவதாகத் தெரியவில்லை.

விடுவிடென்று வீட்டை விட்டுக் கிளம்பி நடந்தாள் அவள்.

மெய்யப்பன், எதிர்த்த வீட்டுப் பையன் ஒருவனைக் கூப்பிட்டு, ''தம்பி! ரேகா கூட நீயும் போய் ஊருக்கு பஸ் ஏத்திட்டு வா...'' என்று அனுப்பி வைத்தார்.

''மிஸ்டர் ராமு! உங்க மனைவி இப்போ பிறந்த வீட்டுக்குப் போகட்டும்... இரண்டு பேரும் கொஞ்ச நாட்கள் பிரிஞ்சிருக்கிறது நல்லதுன்னு நினைக்கிறேன். ரேகா பிறந்தகத்திலே தனியே இருந்தால்தான். உங்களோட அன்பும் பரிவும் இன்னும் தெளிவாகப் புரியும்...'' என்று சிரித்துக் கொண்டே ராமுவிடம் சொல்லிவிட்டு, வெளியே வந்தார் மெய்யப்பன்.

அவர் கூடவே நானும் நடந்து வந்தேன்.

''என்ன ஸார்! என்னாலே நம்பவே முடியலே... இத்தனை நாளும் எவ்வளவு அன்னியோன்னியமாக, அன்போட இருந்தவங்க, இப்போ திடீர்னு சண்டை போட்டுக்கிட்டுப் பிரிஞ்சிட்டாங்களே?'' என்று அவரிடம் மெதுவாகக் கேட்டேன்.

''கணவன் – மனைவிக்கிடையே வெறும் உணர்ச்சி பூர்வமான அன்பு மட்டும் இருந்தால், இப்படித்தான். சின்னக் குற்றத்தையே பெரிசாக்கிக்கிடும். குற்றம் இல்லாததையே குற்றமாக நினைச்சுக்கிடும். கணவன் மனைவி, கொஞ்சறதும் குலாவுறதும் முக்கியமில்லே; ஒருத்தரையொருத்தர் புரிஞ்சுக்கணும்... தன்னோட கணவன், இப்படியெல்லாம் செய்யக் கூடியவனு இல்லையான்னு இன்னும் ரேகா புரிஞ்சுக்கலையே!''

இவங்க குடும்பத்தைப் பார்த்து, ஆகா எவ்வளவு ஒற்றுமையாயிருக்காங்கன்னு நான் ஆச்சரியப்பட்டுக்கிட்டிருந்தேன்...

''அப்படின்னு, என் குடும்பத்தைப் பார்த்து, திடுக்கிட்டுப் போயிருப்பியே?'' என்று அவராகவே கேட்டுச் சிரித்தார் கவிஞர்.

நான் எதுவும் சொல்லாமல், அசட்டுச் சிரிப்பு சிரித்தபடி அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''என் வீட்டிலே, பேசறது எல்லாம், உன் 'வீட்டுக்குக் கேட்குதோ என்னவோ – என் வீட்டிலே எப்போதும் என் மனைவி ராதா தான், லொட லொடன்னு சத்தம் போட்டுக்கிட்டிருப்பா. நான் என்ன சொன்னாலும், உடனே சிடுசிடுன்னு பொரிஞ்சு கொட்டுவா. அவளுக்குக் கொஞ்சம் பி. பி. இருக்கு. ப்ளட் பிரஷராலே அப்படி சிடுசிடுக்கிறாளா, அல்லது அப்படிச் சிடுசிடுக்கிறதாலே ப்ளட் ப்ரஷர் இருக்குதான்னு தெரியலே!'' என்று கடகட எனச் சிரித்தார் அவர்.

தன் மனைவியின் சிடுமூஞ்சித் தனத்தையே இவ்வளவு, எளிதாக எடுத்துக் கொள்ளும் அவருடைய பண்பைக் கண்டு வியந்தபடி நின்றேன் நான்.

''ராதாவோட வாய்தான் அப்படியே தவிர, அவள் மனசு தங்கம்... பலாப் பழம் மாதிரி – வெளியே எல்லாம் முள்: ஆனால் உள்ளே இனிமையான சுளை... என்கிட்டே மட்டுமில்லே, என்னோட உறவுக்காரங்க மேலேயும் அன்பைப் பொழிவாள். அவர்களும் 'இவள்கிட்டே அவ்வளவு பிரியமாய் இருப்பாங்க... என் உறவுக்காரங்க, என்னை விட அவளைத்தான். அதிகமாக நேசிக்கிறாங்க, தெரியுமோ?'' என்று மறுபடியும் களங்கமில்லாமல் சிரித்தார் அவர்.

''மனிதர்களோட உள்ளத்து உணர்ச்சிகளைப் புரிஞ்சுக்கிட்டிருக்கிற கவிஞராச்சே, நீங்க – அதுதான் உங்க மனைவியோட மனசையும் நல்லாப் புரிஞ்சு வச்சிருக்கீங்க...'' என்று அந்தக் கவிஞரின் தலையில் ஐஸ் வைத்தேன்.

''நீ சொல்றது கரெக்ட்... என் கவிதையை அவள் ரசிக்காமல் இருக்கலாம். நீயும் மற்றவர்களும் பாராட்டுகிற அளவுக்கு, அவள் என் கவிதைகளைப் படித்துப் பாராட்டத் தெரியாதவள்தான்.. ஆனால் என்னைக் கவிஞனாகப் பார்க்கிறதைவிட, கணவனாகப் பார்க்கத் தெரிஞ்சவள்... என் மேலே உயிரையே வச்சிருக்கா... எனக்கு ஒரு சின்னக் கஷ்டம் ஏற்பட்டாலும் தாங்க மாட்டா. துடிச்சுப் போயிடுவா.. அந்த அன்பை நான் புரிஞ்சுக்கிட்டிருக்கேன்... குடும்ப வாழ்க்கையிலே, கணவன் – மனைவி, பரஸ்பரம் புரிஞ்சுக்கிறதுதான் முக்கியம்...''

அந்தக் கவிஞர் நிதர்சனப்படுத்திய ஓர் ஆதர்சக் குடும்பத்தின் தத்துவம், என்னுள் சொல்லோவியமாகப் பதிந்தது.


For the joyous moments of life...
plan ahead with KCUB.
A perfect wedding? A fine higher education?
Whatever it be—you can't leave such events
to chance!
Plan for every good moment of your life.
Save with KCUB.
• MONTHLY SAVINGS • CASH CERTIFICATES
• VAMANA VISWARUPA DEPOSIT
• FIXED DEPOSIT.
KCUB
THE KUMBAKONAM
CITY UNION BANK LTD.,
Registered Office: Kumbakonam-612 001
KCUB—The Bank that's committed
to growth — your growth.

MCS KCUB 192

# அந்நியமில்லாத ரணங்கள்

—பி. எஸ். கிரி



தூளியில் அழுது கொண்டிருந்த குழந்தையை மடியில் போட்டுக் கொண்டு வாசலைப் பார்த்த மாதிரி உட்கார்ந்திருந்தாள், எருக்கம்மா.

"ஏம்மே, ஓம் மனசிலே பெரிய மவராணின்னு நெனப்பா...? கொழுப்புமே! வேற ஒண்ணுமில்லே..."

எருக்கம்மாள் புருஷன் ராஜகிளியின் வார்த்தைகளில் எக்கச்சக்கமாய் உஷ்ணம் தெரிந்தது.

"நாயத்தைச் சொன்னு ஒனக்குக் கோவம் பொத்திக்கும்..."

"என்னுமே பொல்லாத நாயம்... பொட்டச்சியா ஒழுங்கா கம்முன்னு இரு... புத்தி சொல்ற ,வேலே வேணும்... மருவாதி கெட்டுப் பூடும்..."

முஷ்டியை மடித்துக் கொண்டு ஓங்கிய கரத்தைக் கீழே போட்டான், ராஜகிளி.

"டீ பாய்லரை எடுத்து வச்சி நெருப்பு போட்டு, காத்தாலே மூணு மணியிலிர்ந்து ராவு பதினொண்ணு முட்டம் ஒரு பொட்டச்சி வேவாரம் பண்ணி..."

எச்சிலைக் கூட்டி விழுங்கினாள், எருக்கம்மா.

"சொல்லுமே, வேவாரம் பண்ணி..."

"கல்லாவிலே கெடக்கறதுட்டைப்பிராண்டிக்கினு போய்க் குடிச்சிப்புட்டு... அந்தச் சாராயக்கடை பொம்மனாட்டி சரகஜூட்டாண்டே விழுந்து கெடந்தாத்தானே ஒனக்குத் தூக்கம் வருது...?"

"ஒன்னாத்தா அப்பன் சம்பாதிச்சுக் கொடுத்த முதல்லே டீக்கடை நடக்குது... தெசந்தானே?"

"ஒழுங்காப் பொழப்பேன்னு என்னாத்தாளும் அப்பனும் கட்டிக் கொடுத்தாங்க... இப்படி சாராயம், கூத்தியாருன்னு... எங்க' பொணத்தைப் பார்க்கிற வரைக்கும் ஓம்புத்தி இப்படித்தான்யா போவும்... ஒன்ன நம்பி இந்தக் கைக்கொழந்தே... அதோ அந்த ஆறு வயசு புள்ளே... அங்கே தூங்கிக்கிட்டுக் கெடக்குதே அந்தப் பத்து வயசுப் பொட்டப் புள்ளெ..."

ராஜகிளி பேசாமல் இருந்தான்.

குழந்தையை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு தட்டில், சோற்றைப் போட்டாள்.

சோற்றைப் பிசைய ஆரம்பித்தான், ராஜகிளி. என்னவோ தெரியவில்லே. மனத்துக்குள் புதிதாய்க் கூச்சம் உற்பத்தியாகியிருந்தது, அவனுக்கு.

நீட்டிய முழங்கால்களின் மீது குழந்தையைப் போட்டுக் கொண்டு அவன் பக்கத்திலேயே எருக்கம்மா உட்கார்ந்தாள். விழிகளில் உலராத ஈரம்.

உருட்டிய சோற்றுக் கவளத்தை வாயில் போட்டுக் கொள்வதற்காகக் குனிந்த போது, ராஜகிளி, அதைக் கவனித்தான். அவன் கரங்கள் ரொம்ப அன்னியோன்னியமாய் அவள் விழிகள் அருகே நீண்ட போது.. எருக்கம்மா முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டாள்.

எங்கேயோ போய்த் திரிந்துவிட்டு, நான்காவது நாள் பாதி ராத்திரியில் சுமாரான சாராய போதையோடு குடிசைக்குள் நுழைந்தான், ராஜகிளி.

மல்லிகைப்பூ வாசனையும், செண்ட் வாசனையும் அவனோடு தொற்றிக் கொண்டு வந்தன.

ரொம்ப சாதாரணமாகவே எருக்கம்மா அதைக் கவனித்தாள்.

குழந்தைகள் தூங்கி விட்டிருந்தன. சிம்னி விளக்கில் எண்ணெய் தீர்ந்து போய்க் குப்பென்று எரிந்து, அது அணைந்து போயிற்று.

கொஞ்சம் எண்ணெயை ஊற்றிச் சன்னமாக அதை எரிய விட்டாள்.

''கொழந்தைங்க தூங்கிடுச்சி ம்மே...''

எருக்கம்மா பதில் பேசாமல் இருந்தாள்.

பல்லை 'இளித்தான். அவளை உரசிக் கொண்டு உட்கார்ந்தான். இரண்டு பொட்டலங்களையும், ஜாதி மல்லிகைப் பூவையும் அவளிடம் நீட்டியபடி ''சீட்டாட்டத்திலே துப்பது ரூபா ஜெயிச்சேம்மே... ஏய் எருக்கம் இந்தாமே... பிரியாணியும், அல்வாவும்... ஒனக்குத்தாம்மே... சாப்புட்டுடு... மல்லிப் பூவும் வச்சுக்கோ...'' என்றான்.

அவன் வார்த்தைகளில் இழைந்த கிறக்கத்தையும், அவன் தேவையையும் எருக்கம்மா புரிந்து கொண்டாள்.

அவன் தோள் பட்டையில் தன் முகத்தை நிறுத்திக் கொண்டு, அவள் செவிகளில் செல்லமாகக் கிசுகிசுத்தான். அவள் இடுப்பைத் தடவினான்.

பொட்டலங்களையும் மல்லிகைப் பூவையும் ராஜகிளியிடமிருந்து ஆக்ரோஷத்தோடு பறித்துத் தெருவில் வீசியெறிந்தாள், எருக்கம்மா. ''ச்சீ... நீ மனுஷனே இல்லேய்யா... ஸ்கோல்லே யாரோ பேனாவைத் திருடிப்புட்டாங்களாம்... வெவரத்தைச் சரியா தெரிஞ்சுக்காமே, ஒங்கப்பன் சாராய புத்தியில்லே ஒனக்கும் வரும்னு இட்டு, பெஞ்ச் மேலே நிக்க வச்சு நம்ம பொண்ணை மச்சரம்மா கண்டிச்சி பூட்டாங்களாம்... ஸ்கோலுக்கே போகலே... சோறு வேணாமுன்னு ரெண்டு நாளா வயத்தைக் காயப் போட்டுக்குனு... அழுது அழுது ரத்தமா செவந்து போயிருக்கு புள்ளையோட கண்ணு ரெண்டும்... பண்ணாத ஒரு தப்புக்காகப் பட்ட அவமானத்தை அந்தப் பத்து வயசுப் புள்ளெ நெனைச்சி அழறப்போ, தப்பையே பொழப்பா வச்சிருக்கிற ஒன்னைப் பத்தி ஒரு நிமிஷம் நெனைச்சிப் பார்த்து வெக்கமாவது பட்டிருக்கிறியாய்யா...?''

''எருக்கம்மா...''

மனத்தின் வேர்களையே அசைத்து விடும் எருக்கம்மாவின் கேள்விகளால் ராஜகிளி முழுசாய் உதிர்ந்து போனான். தவறுகளையும், முரண்பாடுகளையும் சுவாசக் காற்றாக அனுசரித்தவனுக்குள், மானுஷ்யத்தின் ஆரம்பத் தடயங்கள் மெதுவாகப் பரவ ஆரம்பித்தன.

★

# சிப்பிக்குள் முத்து



நரைத்த தாடி மீசை கமலஹாசன் தள்ளாடித் தள்ளாடி நரைமுடி ராதிகாவின் படத்தருகே போய் வெகு மௌனமாக நிற்பதைப் பார்க்கும் போதே ஒரு நீண்ட ஃப்ளாஷ்பேக்கைச் சொல்லப் போகிறார்கள் என்று தெரிந்து விடுகிறது. அந்த ஃப்ளாஷ்பேக்கிற்குப் போகு முன்பு கமலஹாசன் ஏணிமேல் ஏறுவது, மூச்சிரைக்க நடப்பது, பேசுவது எல்லாவற்றையும் காட்டி, பேரன் பேத்திகள், மகன்கள் என்று நடுநடுவே இடறி, முன் கதையை ஆரம்பிப்பதற்குள் ஏக்கம் ஒரு பக்கம், சலிப்பு இன்னொரு பக்கம் என்று ஏற்றி விடுகிறார்கள்.

அந்த ஒட்டுத் தாடி, மீசையைப் பார்க்கும் போது, அந்தக் கிழ காரெக்டரைப் பதிய வைக்க அவ்வளவு முயற்சிகள் மேற்கொள்ளும் போது, துள்ளும் இளமை நிறைந்த கமலஹாசனை எப்போதுதான் காட்டப் போகிறார்களோ என்று எண்ணுகையில் — பராக்! பராக்! இளைய கமலஹாசன் வந்தே விடுகிறார்.

மன முதிர்ச்சியடையாத ஓர் இளைஞனாக கமலஹாசன். அந்த வெட்டப்பட்ட தலைமுடி, கொஞ்சமே கொஞ்சம் குண்டு கன்னங்கள். கருணையான பார்வை, வலது கையைத் தோளுக்கு மேல் தூக்கும் மானரிஸம். இந்தப் படத்தில் கமலஹாசன் நடிப்பில் சில சிகரங்களைத் தொட்டிருக்கிறார்.

மற்றபடி முழுக்கமுழுக்க இது ஒரு டைரக்டர் படம். கே. விஸ்வநாத் சிற்பச் செதுக்கல்களாய் ஃப்ரேம்களைச் செதுக்கியுள்ள படம். கிழ கமலஹாசன் கோலத்திலிருந்து சாணத்தில் பதிக்கப்பட்ட பூவை எடுப்பது, காரின் ஜன்னலோரம் அமர்ந்து கொட்டாங்கச்சி வயலின் வாசிப்பது என்று ஏகப்பட்ட காட்சிகள்.

பாடல்கள் எல்லாமே இனிமைதான் என்றாலும், அந்தத் துள்ளித் துள்ளிப் பாடலுக்கு கமலஹாசன் ஆடும் டான்ஸ் ஓர் அற்புதம். அதைப் படமாக்கிய விதமும் அபாரம்.

பிரம்பால் அடிபட்ட கமலிடம் ராதிகா மிக மௌனமாகக் கம்பை நீட்டுவது, கோயில் பிராகாரத்தில் கான்ஸ்டபிள் துரத்த கமல் ஓடுவது என்று ரசிப்பதற்கு ஏகப்பட்ட காட்சிகள்.

இருந்தாலும் பல்லிடுக்கில் மாட்டிக் கொண்ட சில பாக்குத் தூள்களைப் பற்றிச் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

செக்குக்குச் சொந்தக் காரர் கமலிடம் பத்திரத்தில் கையெழுத்துக்கு மேல் கையெழுத்தாக வாங்குவதாகச் சொல்கிறார்களே எதற்காக?

கதாநாயகனின் மனம் அந்த நாயகியால் முதிர்ச்சியடைந்ததா இல்லையா? பாட்டி செத்த போது சாப்பாடு போடச் சொல்கிறவர், மனைவி இறந்த போது இறப்பை உணர்கிறாரே, அதனால் முதிர்ச்சியடைந்து விட்டார் என்று எடுத்துக் கொள்வதா?

விலாவாரியாகக் கதையைச் சொல்லிக் கொண்டே வந்து, ராதிகா குழந்தை பெறப் போகும் தருணத்தில், 'ம், ம், தாலி ஏறியாச்சு, கட்டுச்சாத மூட்டை எங்கே?' என்ற கதையாய்க் கடைசியில் கமலஹாசன் மடியில் உயிர்விடும் நரைத்த ராதிகாவைக் காட்டுகிறார்களே, அது ஏன்?

தியாகச்சுடர் கமலா, ராதிகாவா?

எங்கேயோ தொடங்கி திடீரென்று நின்ற ஒரு குறிக்கோளில்லாத கதையாகத் தோன்றினாலும் கூட, அந்தக் கதை நிகழ்ந்த வரை அதனுடன் நாம் ஒன்றிப் போனதென்னவோ வாஸ்தவம்!

கே. விஸ்வநாத் தமக்கே தமக்காக என்று மூழ்கிக் கண்டெடுத்த முத்து!

— ஜெயமன்மதன்

29

# இருப்பாக நீ

அநுராதா ரமணன்

வந்து கொஞ்ச நேரமேயானாலும் ஜனார்த்தனத்துக்கு அங்கு என்ன நடந்தது என்பது புரிந்து விட்டது.

அவர் இன்பாவையே அளவு கடந்த வியப்புடன் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

ஒரு பெண் தனக்கு நினைவு தெரிவதற்கு முன்னால் நடந்த சம்பவங்களை இவ்வளவு அழுத்தமாக மூளையில் பதிய வைத்துக் கொள்ள முடியுமா என்ன...?

இதற்கு மேலும் மௌனமாயிருப்பதில் பலனில்லை என்பதைப் புரிந்து கொண்ட புவனா, நடந்தவைகளைப் போலீஸ் ஆபீசரிடமும், மகனிடமும் விவரிக்கிறாள்...

மங்களாம்பாளைக் கொலை செய்ய, டாக்டரிடமிருந்து வாங்கிய விஷத்தை, மறுநாளே அவரிடம் திருப்பிக் கொடுத்த லோகநாதன், ஒன்றுமறியாத அப்பாவியைக் கொலை செய்ய விருப்பமில்லை என்று சொன்னாரே தவிர...

உள்ளுக்குள் அவளைத் தீர்த்துக் கட்டுவதற்கான முயற்சியில் இறங்காமலில்லை. அப்படியே, அவர் சற்றுச் சும்மாயிருந்தாலும், புவனா விடுவதாயில்லை.

''என்னங்க, நகையை எப்ப வாங்கித் தர்றதா இருக்கீங்க, நான் கிழவியானதுக்கு அப்புறமாவரா...?''

இப்படிக் கேட்டு; தொந்தரவு செய்து கொண்டே இருந்தாள்.

விஷத்தைத் திருப்பித் தந்ததற்குக் காரணம், அநாவசியமாய்த் தம் சொத்தில் ஒரு பங்கை, டாக்டருக்கோ, ஸ்டேஷன் மாஸ்டருக்கோ கொடுக்க விரும்பாததுதான்.

''ஏன்... எனக்கு அறிவில்லையா...? என்னாலே திட்டம் தீட்ட முடியாதா...? இதுக்கு எவனெவனோ எதுக்கு...? கையில் அழுக்கு படாமல் இவனுங்க பணத்தை வாங்கிட்டுப் போயிடுவாங்க... கொலை விஷயம் வெளியே தெரிஞ்சா — மாட்டிக்கப் போறது மட்டும் நானா... இதைப் பாரு புவனா... இந்த விஷயத்தை, காதும் காதும் வச்ச மாதிரி முடிக்கப் போறேன்...''

சொன்னதுடன் மட்டும் நிற்கவில்லை. நேரே மாளிகையின் கீழ்ப் பகுதியில் கொத்து வேலைகளை மேற்பார்வை செய்து கொண்டிருந்த நல்லசிவத்தையும் மாடிக்கு அழைத்தார்.

கீழே, இடுப்பில் நல்லசிவத்தின் ஒன்றரை வயசுக் குழந்தையையும், சுற்றி வர, புவனா பெற்ற மூன்று பிள்ளைகளையும் வைத்துக் கொண்டு, பரம அப்பாவியாய் உட்கார்ந்திருந்தாள் மங்களாம்பாள்.

''அம்மா...''

''என்னப்பா...?''

''எசமான் எதுக்கோ மாடிக்குக் கூப்பிடறாரு. போய் என்னன்னு விசாரிச்சிட்டு வந்திடறேன்...''

''போயேன். இதுக்கு என்னைக் கேட்பானேன்?''

''இல்லீங்க. அந்தச் சண்டியைக் கொஞ்சம் பார்த்துக்குங்க. இப்ப நல்லா நடக்க வந்ததுக்கும் அதுக்கும், ஒரே ஓட்டமா ஓடி, சகதியில் கல்லு, கரையை எடுத்து வாயிலப் போட்டுக்குதுங்க...''

நல்லசிவத்தின் பெரிய நிம்மதி என்னவென்றால் — தாயில்லாத் தன் குழந்தையை வளர்க்கும் சகலவிதமான பொறுப்பையும், ஜமீன்தாரிணி மங்களாம்பாள் ஏற்றுக் கொண்டதுதான்...

மங்களாம்பாளுக்கு மட்டுமில்லை, புவனாவின் குழந்தைகளுக்கும் நல்லசிவத்தின் பெண், மகா செல்லம்தான்... அதுவும் அவினாஷ்க்குத் தங்கையில்லாத குறை நிறைய... மங்களா சுமந்த நேரம் போக, மிச்ச நேரமெல்லாம், அவன்தான் குழந்தையைச் சுமப்பான்.

புவனா முகத்தைச் சுளிப்பாள். தனியே, மகனை அழைத்துக் கண்டிப்பாள்...

மாடிக்குப் போன நல்லசிவம், ஏதோ கட்டிட வேலைகளில் சின்னச் சின்ன மாறுதல்களை எசமான் சொல்லப் போகிறாராக்கும் என்று நினைக்க...

அவர் பெரிய குண்டைத் தூக்கிப் போட்டதும் அதிர்ந்து விட்டான்.

''எசமான்...''

''என்னடா... இதுல நீ எந்த வம்புலேயும் மாட்டிக்கப் போறதில்லை. தீர்த்துக் கட்டப் போறவன் நான். உன் வேலை, பொணத்து மேல இருக்கிற நகைங்களை ஒரு குந்துமணி கூட விடாமல் எடுத்து வச்சிட்டு, பொணத்தைக் கட்டிட்டிருக்கிற தூண்லே ஏதாவது ஒண்ணுல வச்சு, ராவோட ராவா செங்கல்லேயும், காரையையும் வச்சுப் பூசிட வேண்டியதுதான்... கூட்டுக்கு எந்த சித்தாளையும் சேர்த்துக்காதே... பொழுது விடியறதுக்குள்ளே குறைந்தபட்சம் ரெண்டு தூணையாவது பூசி முடிச்சுடு. 'என்னடா இத்தனை அவசரம்'னு யாராவது கேட்டால், எசமான் ஊருலேயிருந்து திரும்பறதுக்குள்ளே முடிச்சிடணும்னு சொல்லியிருக்காருன்னு சொல்லு...''

''வேண்டாம் சாமி... அந்த உத்தமியை ஒண்ணும் செஞ்சிடாதீங்க. ஆயுசுக்கும் அந்தப் பாவம் நம்மைச் சும்மா விடாது...''

அவன், கண்ணீர் வழியத் தழுதழுத்தான்.

''நல்லசிவம்... என் நிலைமை உனக்குப் புரியாது... ரெண்டு பெண்டாட்டியையும்

திருப்தி பண்ணிட்டு என்னால வாழ முடியலே... மங்களா கழுத்துல தாலி கட்டினேனே தவிர, அவளோட ஒருநாள் கூட நான் சந்தோஷமா வாழலே... ஆனா புவனா அப்படியில்லே... எனக்கு சந்தோஷத்தை மட்டும் தரல்லே... மணி மணியா மூணு பிள்ளைகளையும் தந்திருக்கா... நியாயப்படி பார்க்கப் போனா, நகையும் சொத்தும் இவளுக்குப் போக வேண்டியதுதான் முறை..''

லோகநாதன், தம் தரத்துக்குச் சிறிதும் பொருத்தமில்லாத ஒருத்தனிடம், இந்த அளவுக்கு மனம் விட்டுப் பேசுகிறார் என்றால்...

ஒன்று, அவன், அவரது பால்ய சினேகிதன்.

இரண்டு — டாக்டர், ஸ்டேஷன் மாஸ்டர் இவர்களை நம்புவதைவிடவும் இவனைப் பூரணமாக நம்பலாம். அவர்களுக்கு லட்சக் கணக்கில் கொடுப்பதை விடவும், இவனுக்குச் சில ஆயிரங்களைக் கொடுத்து நறுவிசாகக் காரியத்தை முடிக்கலாம்.

மூன்று: மங்களாம்பாளின் உடலை டாக்டர் வசம் ஒப்படைத்து, அவர் வெளியே எங்கேயாவது புதைத்து, சில நாட்களில் குட்டு வெளிப்படுவதை விடவும், நல்லசிவம் ஒத்துழைத்தால் வீட்டுக்குள்ளேயே அடக்கம் பண்ணிவிடலாம்.

அவனைச் சம்மதிக்க வைக்கத்தான் அவர், பெரும்பாடுபட வேண்டியதாகப் போய் விட்டது.

கடைசியில் இப்படிச் சொன்னார்:

''நல்லசிவம்.. இதுக்கு மட்டும் சம்மதிச்சியானா — என் நிலத்துல உனக்கு ஒரு வீடு கட்டிக்க ஏற்பாடு செய்யறேன்... உன் காலத்துக்குப் பிறகு — உன் பொண்ணுக்கு ஒரு வீடு இருக்குங்கிற நிம்மதி உண்டு. அதோட, பத்தாயிரம் உன் பேர்லே பாங்க்லே போடறேன். உன் பொண்ணு கல்யாணத்தை ஜாம் ஜாம்னு நடத்தலாம். நல்லா யோசிச்சுப் பாரு... உன் ஆயுசுல கனவுல கூட முடியாத விஷயம் இது...''

நல்லசிவம் பேச்சடைத்துத் திரும்பினான். ஜமீன்தாரிணியின் உப்பைத் தின்று, அவளுக்குத் துரோகம் நினைக்கவும் முடியவில்லை. தன் மகளுக்குக் கிடைக்கப் போகும் அதிர்ஷ்டத்தை உதறவும் மனசு வரவில்லை. எல்லாவற்றையும் விடத் தன் லட்சியமான கல் வீடு... மழையில் ஒழுகாமல், காற்றடித்தால் கூரை பறந்து போகாமல்..

ஜமீன்தார் அன்றிரவே புவனாவைத் தயார் செய்து விட்டார்.

தனக்காகக் கணவன், மூத்தாளைக் கொலை செய்யப் போவதை, அறிந்ததும் புவனா திடுக்கிட்டாள். வேண்டாம் என்று கூடத் தடுத்தாள்.

''பைத்தியம்... அவ, நான் கேட்கிறதைக்



கொடுத்துட்டா அவளை யாரு என்ன செய்யப் போறாங்க... தரல்லையின்னுதானே பிரச்னை? அதுவும் என் கையாலே கொல்ல மாட்டேன்... அதெல்லாம் நல்லசிவம் பார்த்துப்பான்...''

அன்றிரவு — ரயிலுக்குப் போக வேண்டியிருப்பதால் மாதையனை வண்டி கட்டி வர வேண்டும் என்று சொன்ன லோகநாதன் — அன்று மாலை மங்கும் போதே, மங்களாவின் கதையை முடித்து விட்டார்.

மாலை ஆறு மணி இருக்கும்... மங்களாம்பாள் வசிக்கும் அறையில் — ஜமீன்தாருக்கும் அவளுக்கும் வாக்கு வாதம் மூண்டது...

நல்லசிவத்தின் ஒன்றரை வயசுப் பெண் குழந்தை — ஜமீன்தார் போட்ட சத்தத்தில் விழித்து எழுந்து கதறத் தொடங்கியது..

மேஸ்திரி நல்லசிவம், உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு, கட்டிட வேலை நடக்கும் பகுதியில் அலைபாய்ந்து கொண்டிருந்தான். பயம் தெரியாதிருக்க, நடுநடுவே சாராயத்தை வேறு உள்ளே இறக்கிக் கொண்டிருந்தான்.

மாதையன், மனைவியுடன் தோட்ட வீட்டில் இருந்ததால் பங்களாவில் நடக்கும் கலவரம், அவனுக்குத் தெரிய வாய்ப்பில்லை. மேலும், அடிக்கடி லோகநாதன் இதுபோல் மனைவியுடன் சண்டை போடுவாராதலால் இது ஒன்றும் பொருட்படுத்துகிற மாதிரி இல்லை...

வீட்டிலிருந்த இரு வேலைக்காரர்களையும் முன் கூட்டியே வெளியே அனுப்பி விட்டார் லோகநாதன். சமையற்காரன் இரவு சினிமாவுக்கு...

சண்டை முற்றி, மங்களாம்பாளின் கையிலிருந்த குழந்தையைப் பிடுங்கி, ஒரு பக்கம் வீசியெறிந்த லோகநாதன், அதுவரையில் தாம் மறைத்து வைத்திருந்த பிச்சுவா கத்தியை ஓங்க, திமிறிய மங்களாம்பாளின் முன் நெற்றியில் கத்திமுனை பட்டு, குபுகுபுவென ரத்தம் பெருக — அவள் சற்றும் எதிர்பாராத வகையில் கழுத்தில் கத்தியால் ஆழமாய்க் குத்தினார் லோகநாதன்.

''பெரிம்மா... பாப்பா இங்கே இருக்கா...?''

அந்த நேரம் பார்த்து, மூடியிருந்த கதவைத் திறந்து கொண்டு, வேகமாய் உள்ளே வந்த அவினாஷ் — கண்முன் கண்ட காட்சியினால் பாதிக்கப்பட்டு உறைந்து போய் நின்றான்...

ஆனால் — லோகநாதன் இதையெல்லாம் கவனிக்கும் நிலையில் இல்லை. பரபரப்பாய்ச் செயல்பட்டார்.

அவினாஷையும், கதறும் குழந்தையையும் வெளியே தள்ளி, அறைக் கதவைப் பூட்டினார். சாவியை, நல்லசிவத்திடம் ஒப்படைத்தவர், அவினாஷை மாடிக்கு அழைத்துப் போய்ப் புவனாவிடம் தள்ளினார்.

''இந்தா, இவனை யாரு அங்கே விட்டது?''

புவனா பேசவில்லை.

அவினாஷை விடவும், அவள் நிலைகுலைந்து போயிருந்தாள். ஏனெனில் சற்றுமுன் நடந்த சம்பவத்தை அறைக் கதவை ஒருக்களித்து வைத்தபடி பார்த்துக் கொண்டிருந்தவள், மங்களாவின் நெற்றியில் கத்தி பட்டவுடனேயே ஓடி வந்துவிட்டாளே!

லோகநாதன், தாம் உட்கொள்ளும் தூக்க மாத்திரைகளில் ஒன்றை அவினாஷுக்குக் கொடுத்தார்.

''இந்தா... குடி... இங்கே நடந்தது எதையாவது வெளில சொன்னே... தீர்த்துக் கட்டிடுவேன் உன்னையும்...''

அந்தப் பிள்ளை மிரண்டு போய்த் தலையை ஆட்டியது... மாத்திரையை விழுங்கி, கட்டிலில் கிடந்த சகோதரர்களுடன் தானும் சுருண்டு படுத்தது...

லோகநாதன், மங்களாவின் புடைவை ஒன்றைப் புவனாவிடம் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் சொன்னார்.

மங்களாம்பாளின் நகைகளைக் கழற்ற அவகாசமில்லை அவருக்கு...

நல்லசிவத்தை அழைத்து — அன்றிரவுக்குள் அரைகுறையாய்க் கட்டப்பட்டிருந்த தூண்களில் ஏதாவது ஒன்றில் மங்களாவை வைத்து மூடி விடும்படியும், அதற்கு முன் நகைகளைப் பத்திரமாய் எடுத்து வைக்கும்படியும் சொல்லி விட்டுக் கிளம்பி விட்டார்...

மாதையன் அப்பொழுது ஒரு பிரச்னையே இல்லை... பெண்டாட்டி இருந்ததால், ரயிலேற்றி விட்டதும் — நேரே, தன் குடிசைக்குப் போய் விடுவான் என்பது அவருக்குத் தெரியும்...

இரவு ஆட்டம் முடிந்து இரண்டு மணி சுமாருக்குச் சமையற்காரன் வருவான்... அதற்குள் அவரே — பக்கத்து ஸ்டேஷனில் இறங்கி, வாடகை டாக்சி பிடித்து ஊர் வந்து சேர்ந்து மனைவியைப் பங்களாவின் பின்புற மாடிப்படியில் விட்டு விட்டு, அதே டாக்சியில் மாயவரம் கிளம்பி விடுவார்.

எல்லாமே திட்டமிட்டபடிதான் நடந்தது.

நல்லசிவம்தான் பதற்றத்தில் இருந்தான். கம்பிகள் செருகப்பட்டு ஆரம்ப நிலையில் இருந்த தூண் ஒன்றில் மங்களாவை நிறுத்தி வைத்து மளமளவெனச் செங்கல்லை வைத்துக் கட்டிக் கொண்டே போனவன் — நகைகளைக் கழற்றிப் பத்திரப்படுத்த வேண்டும் என்பதையே மறந்து விட்டான்.

அதற்குக் காரணம், மூக்கு முட்ட அவன் குடித்திருந்த சாராயம்... இரண்டாவது — தூக்க மாத்திரையை விழுங்கியும் தான் கண்ட காட்சியின் பயங்கரத்தினால் தூக்கம் வராத அவினாஷ் நள்ளிரவில் அம்மாவும் பக்கத்தில் இல்லாததால் விழித்தடித்துக் கொண்டு கீழே ஓடி வர — தூணுக்குள் பெரியம்மா சமாதியுறும்' காட்சியைக் கண்டு கதறியது...

''மேஸ்திரி... மேஸ்திரி... வேண்டாம் மேஸ்திரி... அவங்க சாகலே மேஸ்திரி... விட்டுடு.. பெரியம்மா...''

''போடா அப்பாலே!''

நல்லசிவம் அவனையும் சமாளித்து, வாய் ஓயாமல் விறிட்டபடி அந்தக் காட்சியைக் கண்களால் பார்த்தபடி உட்கார்ந்திருக்கும் மகளையும் சமாளித்து...

# ஈகிள்
# பட்டாசுகள்
# EAGLE

## FIREWORKS CRACKERS & SPARKLERS

சென்னை, சிந்தாமணி சூப்பர் மார்க்கெட், செங்கல்பட்டு மாவட்ட நுகர்வோர் கூட்டுறவு பண்டக சாலை, வட ஆற்காடு மாவட்ட கற்பகம் சூப்பர் மார்க்கெட், தென் ஆற்காடு மாவட்ட சரவணபவா சூப்பர் மார்க்கெட், கோயம்புத்தூர் மாவட்ட சிந்தாமணி சூப்பர் மார்க்கெட், திருப்பூர் வளர்மதி சூப்பர் மார்க்கெட், மதுரை மாவட்ட பாண்டியன் சூப்பர் மார்க்கெட், இராமநாதபுரம் மாவட்ட நுகர்வோர் கூட்டுறவு பண்டக சாலை, கோயம்புத்தூர், ஊட்டி, பொள்ளாச்சி, சேரன் போக்குவரத்துக் கூட்டுறவு பண்டக சாலைகள், சீர்காழி தாலுகா கூட்டுறவு ஸ்டோர், கும்பகோணம், சந்திரசேகரபுரம் கூட்டுறவு ஸ்டோர், கோபிசெட்டிபாளையம், மேட்டுப்பாளையம், உடுமலைப்பேட்டை ஆகிய ஊர்களின் கூட்டுறவு ஸ்டோர்கள், சங்ககிரி ஐ. சி. எல்., கூட்டுறவு ஸ்டோர், கோயம்புத்தூர் லட்சுமி மிஷின் ஒர்க்ஸ் கூட்டுறவு ஸ்டோர்ஸ், லட்சுமி மில்ஸ் பணியாளர்கள் கூட்டுறவு ஸ்டோர்ஸ், பிரிகால் பணியாளர்கள் கூட்டுறவு ஸ்டோர்ஸ்... ஸ்டேட் பாங்க் அலுவலகங்கள் கூட்டுறவு ஸ்டோர்ஸ், சக்தி நகர், சக்தி சுகர்ஸ் தொழிலாளர்கள் கூட்டுறவு ஸ்டோர்ஸ், கோயம்புத்தூர் சிறுவாணி சூப்பர் மார்க்கெட் மற்றும் மேற்கண்ட சூப்பர் மார்க்கெட்டுகளைச் சார்ந்த அனைத்துக் கிளைகளிலும் எங்களின் சொந்த விற்பனை டிப்போக்களாகிய சென்னை ஈகிள் ஃபயர் ஒர்க்ஸ் கம்பெனி, 31, பந்தர் தெரு, மதுரை 48, கீழ மாசிவீதி மற்றும் பல கூட்டுறவு சிறப்பங்காடிகளிலும், சிற்றங்காடிகளிலும், பாரத நாட்டின் பட்டாசு வியாபாரிகள் எல்லோரிடமும், எங்களது தரம் மிக்க **ஈகிள்** டார்ஜான் பட்டாசுகளும், கம்பி, சக்கரம், சாட்டை மற்றும் நூதன வாண வகைகளும், "**பேபி**" பொட்டு, ரோல், கேப் வகைகளும் ஜனரஞ்சகமாக விற்பனை ஆகிக் கொண்டிருக்கின்றன. பொது மக்கள் யாவரும் எங்கள் தரம் மிக்க **ஈகிள்** பட்டாசு வகைகளை வாங்கிக் குதூகலத்துடன் தீபாவளியைக் கொண்டாடி மகிழும்படி கேட்டுக் கொள்கிறோம்.

தயாரிப்பாளர்கள்:

### தி சதர்ன் இண்டியா எக்ஸ்போர்ட்டிங் கம்பெனி

லார்டு பயர் ஒர்க்ஸ் இண்டஸ்ட்ரீஸ், லார்டு பேப்பர்கேப் பாக்டரி,
த.பெ. எண்: 69, 122 புதுரோட்டுத் தெரு, சிவகாசி—626 123.

Phone: Office: 20094 & 20095
Resi: 20572
Fact: 20021 & 21042

Telex: 0448-243 Lord In
Telegrams: "Export"

கடைசியில் அவினுஷை அடித்து மாடியில் தள்ளிக் கதவைத் தாழிட்டான்...

புவனு வந்ததும், எஜமானன் சொன்ன வேலையைச் செய்து முடித்துவிட்டதாகச் சொன்னுன்...

மேற்கொண்டு எதுவும் கேட்கும் நிலையில் அவனும் இல்லே...

நல்லசிவம் — மங்களாம்பாள் இறந்து கிடந்த அறையைச் சுத்தமாய்க் கழுவி, பூட்டி, சாவியைப் புவனுவிடம் ஒப்படைத்துவிட்டு வீடு திரும்பியவன்தான்.

மறுநாள் காலையில் வேலைக்கு அவன் வருவதற்குள் — மற்ற கொத்தனுர்கள் வந்து தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள்.

''ஏன் மேஸ்திரி... ராத்திரியெல்லாம் வேலே செஞ்சீங்களா என்ன... அப்படி என்ன அவசரம்?''

''சும்மாந்தான், மனசு சரியில்லாமல் உட்கார்ந்திருக்கிறதுக்கு... ஏதாவது உருப்படியா செய்யலாமேன்னு...''

சொல்லிக் கொண்டே வந்தவன், தன் கண்ணெதிரே நான்கு தூண்கள் முழுசாய் முடிந்த நிலையில் இருப்பதைக் கண்டதும் பிரமித்து நின்றுவிட்டான்.

''என்னப்பா இது... யாரு முடிச்சாங்க..?''

உதவியாளர்கள் பெருமையுடன் சிரித்தார்கள்.

''ஏண்ணே... ஒரு தனி மனுஷனு நின்னு, ராவோட ராவா, ரெண்டு தூணே முடிச்சிருக்கீங்க. பகலுக்குள்ள நாங்க பத்து பேரா சேர்ந்து ரெண்டு தூணே முடிச்சதுதானு பிரமாதம்...?''

அவன் குழம்பினுன்.. 'முதல் நாளிரவு தான் முடித்தது இரண்டு தூண்களேயா...? அப்படியானுல் எதில் ஜமீன்தாரிணியம்மாவை வைத்து மூடினேம்...' என்கிற பிரச்னே எழுந்தது.

அந்த நேரத்தில்தான் நகைகளின் நினைப்பும் வந்தது.

'ஐயோ! அத்தினி நகையையும் அம்மா ஒடம்புலேயிருந்து கழற்ருமயே தூணுல வச்சு, மூடிட்டேனே... ஜமீன்தார் வந்து கேட்டால் என்ன செய்யுவேன்...?'

'நம்புவாரா... அத்தினியையும் நானே அமுக்கிக்கிட்டேன்னு சொன்னுருன்னு என்னு பண்ணுறது...?'

'தூணே உடைக்கலாமா...?

'எந்தத் தூணே... எந்தத் தூண்டா பாவி?

மற்றவர்களிடம் இதுபற்றிக் கேட்கவும் பயம். மேல் தளத்துக்கு ஆதாரமாய் அமைந்துவிட்ட தூண்களே இனிமேல் இடிப்பதென்பது பைத்தியக்காரத்தனம்..

இந்த நினைப்பே அவனே அதிரடிக்க — இரண்டாம் நாளே காய்ச்சலில் படுத்து விட்டான்.

ஜமீன்தார் ஊர் திரும்பி, மாயவரத்தில் மங்களாம்பாள், தன்னே விட்டு ஓடி விட்டதாகக் கதைத்து, அமர்க்களம் செய்து, நல்லசிவம் படுத்த படுக்கையாக இருப்பது கண்டு ஓடி வந்து, அவனேக் காப்பாற்ற முயன்ற போது, அவன் நிரந்தரமாகக் கண்களே மூடி விட்டான்.

பேசாத மனேவியும், பைத்தியக்காரப் பிள்ளேயுமாய் மங்களாம்பாளுக்குச் செய்த துரோகத்துக்குத் தண்டனேயாய் அவருக்குக் கிடைத்தபின்னும் ஆயுள் தண்டனே அவருக்கு





சுதா: நானும், என் கணவரும் ஒரே ஆபீஸில் வேலே செய்யறதுல ஒரு சௌகரியம் இருக்கு...!''

லதா: ''என்ன...?''

சுதா: வீட்டில் இடையில் நின்று போன சண்டையை ஆபீஸில் தொடர முடிகிறதே...!'' — வி. சாரதி டேச்சு

''போகும்போது காலில் செருப்பு இல்லாமப் போனீங்க! இப்ப செருப்பு மாட்டிக்கிட்டு வர்றீங்களே?''

''ஹி... ஹி... போன தடவை இந்தக் கல்யாண மண்டப வாசல்ல என் செருப்பைத் தவற விட்டுட்டேன்.. என்ன அதிசயம் பாருங்க. அது அப்படியே பத்திரமா கிடந்து இப்பக் கிடைச்சுது.. ஹி... ஹி...!'' — மணியன் தர்மலிங்கம்

''தீபாவளி பரிசாக வாட்ச்; வாட்சுக்கு மேலே ஒரு ரூபாய். டிரஸ்; டிரஸ்ஸுக்கு மேலே ஒரு ரூபாய். மோதிரம்; மோதிரத்துக்கு மேலே ஒரு ரூபாய் என்று மாப்பிள்ளைக்குத் தந்தேன்!''

''அதென்ன! மேலே ஒரு ரூபாய்?''

''அவர் டாக்ஸி டிரைவராச்சே!''



அவசியமில்லைதான்... என்ன செய்வது... சட்டம் என ஒன்றிருக்கிறதே...

திட்டம் போட்டு மனைவியைக் கொன்றதுமில்லாமல், இதுநாள் வரையில் கொலையை மறைத்தும் இருக்கிறாரே...

புவனா, டாக்டர் மீது நிறைய புகார்களை அடுக்கியிருக்கிறாள்.

தனக்கு ஒத்துக் கொள்ளாத மருந்துகளைக் கொடுத்துப் படுக்கையிலேயே கிடக்கவைத்ததாகவும், அடிக்கடி மங்களாம்பாளின் நகைகள் எங்கே என்று கேட்டும், பதில் கிடைக்காத ஆத்திரத்தில் தன் மகன் அவினாஷுக்கு ஊசி போட்டு, ஏற்கெனவே குழம்பிக் கிடந்த மூளையை மேலும் குழப்பியதாகவும்...

நந்து, இன்பாவின் தோளில் கையூன்றி, போலீசாரால் இடிபடும் தூணையே வைத்த கண் வாங்காமல் பார்க்கிறான்.

ஒரு பெண் மீதுள்ள காதலுக்காகக் கொலை செய்யும் அளவுக்குப் போவார்களா...?

"இன்பா, ஒன்றரை வயசுல உன் கண்ணெதிரே நடந்த சம்பவத்தை எப்படி நினைவுல வச்சுக்க முடிஞ்சது?"

நந்து கேட்க, ஜனார்த்தனம் சொல்கிறார்:

"அம்மா வயித்துல இருக்கிறப்பவே ஒரு குழந்தைக்கு — வெளியில தன்னைச் சுத்தி நடக்கிறதையெல்லாம் நினைவுல பதிய வச்சுக்க முடியும்னு மனோதத்துவ மேதைங்க சொல்லுவாங்க நந்தா...

"ஏங்க, பிரகலாதன், தாய் வயித்துல இருக்கறச்சே, நாராயண மந்திரத்தை நாரதர் உபதேசிச்சாராமில்லே... அவர் கேட்டுக் கலையா... நானும் தெருக் கூத்து, கதைக்கெல்லாம் போறது உண்டுங்க..." — இது மாதையன்.

அவினாஷ் உடைபடும் தூணைப் பார்த்தபடி ஒரு பக்கமாய் அமர்ந்திருக்கிறான். கண்களில் அருவியாய்க் கண்ணீர்.

பாதி உடைபட்ட தூணிலிருந்து எலும்புக் கையொன்று வெளியே வர — சுத்தியலின் அதிர்வில் வைர வளையல் ஒன்று தெறித்து, இன்பாவின் காலடியில் விழுகிறது.

குனிந்து, வளையலைக் கையிலெடுத்தவளின் காதருகில் காற்றோடு கலந்த மங்களாம்பாளின் தாலாட்டு...

"ராரி ராரி ராரீரி ராரீ... இவன்...
பொன்னை அழிக்க வந்தா,
பொன்னுல சீர் குலைவான்!
நெருப்புக்கு முன் எதுவும்
நில்லா விதம் போல
பொன்னுக்குக் குறையேதும்
பூமிதனில் நேராது...
ராரி ராரி ராரீரி ராரீ... நான்...
பொல்லாதப் பெரு நெருப்பு...
ராரி ராரி ராரீரி ராரீ... நீ...
நெருப்பின் பிரதிபலிப்பு..."

இன்பாவின் விழிகளில் ஜொலித்த வைரம், வளையலின் மீது விழுந்து சிதற...

நந்து, அவளது கண்ணீரைத் துடைக்கிறான்...

புவனா, அவளது கரத்தைப் பரிவாய்ப் பற்றுகிறான்...

(முற்றும்)

"தீபாவளி டிரஸ், தீபாவளி பரிசு என்று எதுவுமே உன் மாப்பிள்ளை உன்னைக் கேட்கவில்லையாமே! அதெப்படி?"

"தலைவலி மாத்திரை கேட்டார்; தூக்க மாத்திரை தந்தேன்!"





"பாவம்! மாப்பிள்ளை வெடித்த பட்டாசுக் காகிதங்களைப் பொறுக்குகிறாரே! எதற்கு?"

"அவர் எழுதிய துணுக்குகளைப் பார்த்தாராம்!"





# அதிகார மாற்றம்: பிரிட்டனின் அறிக்கை



ஜான் மத்தாய்

7

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — III**
**ராஜ்மோகன் காந்தி**

***1946*** செப்டம்பர் 11 ஆம் தேதி ஸி. ஆருக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைத்தார் வைஸ்ராய் வேவல். 'மந்திரி சபையின் நிர்வாக ஆற்றலும் வாதத் திறனும் கணிசமாக அதிகரிக்கும் என்பது கண் கூடு'' எனத் தமது டயரியில் எழுதினார் வேவல்.

கிளைவ் சாலையின் முதல் வீடு ஸி. ஆருக்கு ஒதுக்கப்பட்டது. ஒரே வீட்டைப் பகிர்ந்து கொள்ளலாம் என்ற 71 வயது பட்டேலின் யோசனையில் ஸி. ஆர். ஆர்வம்காட்டவில்லை. எளிமையாக வாழ அவரால் முடியாது என்பதல்ல. புதிய இடத்தில் புதிய வீட்டை நிர்வகிக்கும் சிரமம் ஸி. ஆரின் மகள் நாமகிரிக்கு வேண்டாம் என்ற பட்டேலின் நல்லெண்ணமும் ஸி. ஆருக்குப் புரிந்தது. ஆனாலும் அந்த யோசனையை புத்திசாலித்தனமாக அவர் கருதவில்லை. அதற்குக் காரணமும் இருந்தது:

புதிய அரசின் திறமையான செயல்பாட்டுக்கு மிக அவசியமாக இருந்த நேரு — பட்டேல் ஒத்துழைப்பு இயல்பாகக் கிடைத்து விடும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. நேரு காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதை பட்டேல் ஏற்றுக் கொண்டிருந்தார். ஆனால் அவர் மனம் காயமுற்றிருந்தது. ஸி. ஆர். நேருவை விட பட்டேலிடம்தான் பல ஆண்டுகளாகவே மனத்தளவில் நெருக்கமாக இருந்து வந்திருக்கிறார். இப்போதோ நேரு — பட்டேல் ஆகிய இருவரிடையில் மத்யஸ்தம்செய்துவைக்கவேண்டியநிலையில் தாம் இருப்பதை அவர் உணர்ந்தார். அப்படி இருக்கும்போது பட்டேலுடன் தாம் மிகவும் நெருங்கி இருப்பது போல் வெளிப்படையாகக் காட்டிக் கொள்வது சரியாகாது.

ஆயினும் ஸி. ஆருக்கும் பட்டேலுக்கும் இந்தக் காலகட்டத்தில் தனிப்பட்ட முறையிலும் லட்சிய நோக்கிலும் இருந்த கருத்தொற்றுமையைக் குறைத்து மதிப்பிட்டு விட முடியாது. ஸி. ஆர். தில்லிக்கு வருவதில் தாமதமேற்பட்டதே பட்டேலுக்கு ஏமாற்றத்தை அளித்திருந்தது. ''தினம் தினம் புதிய, சிக்கலானபிரச்னைகளும்சிரமங்களும்முளைக்கின்றன. அவற்றை உங்கள் உதவியும் ஆலோசனையும் இன்றியே நாங்கள் சமாளிக்க வேண்டியிருக்கிறது. எவ்வளவு சீக்கிரம் வருகிறீர்களோ அவ்வளவுக்கு நல்லது'' என்று ஸி. ஆருக்கு எழுதியிருந்தார் பட்டேல்.

ஸி. ஆர். பதவியேற்ற மூன்றாவது நாள் அவரைக் கொல்ல நடந்த ஒரு சதியிலிருந்து தப்பிப் பிழைத்தார். மாலை ஐந்து மணிக்குச் சற்று முன்னதாக அவருக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த கரும் பச்சை நிற பிளைமவுத் கார் நோக்கி ஒருவன் துப்பாக்கியால்



''என்னங்க அது உங்க கையில் இரண்டு கட்டு?''

''தீபாவளி வெடி கையைச் சுட்டதுக்கு ஒண்ணு. தீபாவளி செலவு கையைக் கடிச்சதுக்கு ஒண்ணு!''

சுட்டான். நல்லவேளை, வி. ஆர். அப்போது காரில் இல்லை. சில நிமிஷங்களுக்கு முன்னர் தான் அவர் கன்னாட் ஸர்க்கஸ் பகுதியில் தமது மகள் லக்ஷ்மியின் இல்லம் இருந்த கட்டிட வாசலில் இறங்கிக் கொண்டு காரை அனுப்பி விட்டிருந்தார். துப்பாக்கித் தோட்டா காரின் பின்புற டிக்கி கதவைத் துளைத்துக் கொண்டு உட்புகுந்திருந்தது. வி. ஆர். காரில் இருப்பதாக நினைத்துக் கொண்டு சுட்டவன், பிடிபடவேயில்லை. அவன் நோக்கமும் தெரியவரவில்லை. ஒருவேளை அவன் ராஜாஜியின் கருத்துக்களை எதிர்த்த ஓர் இந்து தீவிரவாதியாக இருந்திருக்கலாம்.

வி. ஆர். பதவிப் பிரமாணம் ஏற்ற அன்றே, ''முஸ்லிம் லீகும் இடைக்கால தேசிய அரசில் இடம் பெற வேண்டும்'' என்று வேவல் நேருவிடம் கூறினார். இந்த யோசனை நேருவுக்குப் பிடிக்கவில்லை என்றாலும், ''நீங்கள் இது தொடர்பாக ஜின்னாவைச் சந்திக்க விரும்பினால் நான் தடுக்க முடியாது'' என்று பண்பான பதிலை அளித்தார்.

இடைக்கால அரசில் முஸ்லிம் லீக் சேர்ந்த போதிலும் ஜின்னா சேரவில்லை. நேருவுக்குக் கீழ் பணியாற்ற அவரால் முடியாது. அதே நேரத்தில் பாதுகாப்பு அல்லது உள்துறை அமைச்சர் பதவி முஸ்லிம் லீகைச் சேர்ந்தவருக்கே தரப்பட வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். 'உள்துறை அமைச்சு முஸ்லிம் லீகுக்கு விட்டுக் கொடுக்கப்படலாம்' என்று வேவல் காங்கிரஸை வற்புறுத்தினார். ஆனால் அந்தப் பொறுப்பை வகித்து வந்த படேல் அசைந்து கொடுக்கவில்லை. கடைசியில் மிக முக்கியமான நிதி அமைச்சு லீகுக்குத் தரப்பட்டதன் மூலம் பிரச்னைக்குத் தீர்வு ஏற்பட்டது. நிதி அமைச்சர் பொறுப்பைத் துறப்பது என்பது ஜான் மத்தாய்க்குப் பிடித்தமானதாக இல்லை. வி. ஆர். அவரைத் திருப்திப்படுத்தத் தொழில் துறையை அவருக்கு விட்டுக் கொடுத்துவிட்டுக் கல்வி மந்திரியானார்.

அமெரிக்காவில் ஜின்னாவின் தனிப்பட்ட தூதராக இருந்து வந்த இஸ்பஹானி கூறினார்: ''லீக் இடைக்கால அமைச்சரவையில் பங்கேற்றிருப்பது எதற்காக? அரசுக்கு வெளியே மட்டுமின்றி அரசுக்கு உள்ளிருந்தபடியும் முஸ்லிம் லீக் பாகிஸ்தானுக்காகப் போராடும் என்பதே இதன் அர்த்தம்!'' ஆரம்பத்திலிருந்தே லீக் அங்கத்தினர்கள் சம அந்தஸ்துடைய மற்றொரு அரசு போல் செயல்படத் தொடங்கினர். அமைச்சரவையின் துணைத் தலைவர் என்ற நேருஜியின் தகுதியையும் பதவியையும் அவர்கள் கண்டு கொள்ளவேயில்லை. ஜின்னாவோ வெளிப்படையாகவே பேசினார்: ''நேரு விண்ணிலே மிதக்காமல் யதார்த்த உலகுக்கு வந்து அமைதியாகச் சிந்திப்பாரேயானால் தாம் பிரதம மந்திரியும் அல்ல, இது நேரு அரசும் அல்ல என்பதைப் புரிந்து கொள்வார். அவர் அயல் விவகார இலாக்காவின் ஓர் உறுப்பினர், அவ்வளவே!'' தேசிய அரசு – கூட்டணி அரசு – உட்பூசல்கள் நிறைந்த வீடாக விளங்கியது.

லியாகத் அலிகான் வெகு சாமர்த்தியமாக ஒரு பட்ஜெட்டைச் சமர்ப்பித்தார். அதிக வருவாய் உள்ளவருக்கு அவர் விதித்த வரி விகிதங்கள் சரித்திரம் காணாத அளவில் அபரிமிதமாக இருந்தன. ஆனால் சோஷலிஸம் பேசிய அங்கத்தினர்களைக் கொண்ட காங்கிரஸால் இதை எதிர்க்க முடியவில்லை. அதே நேரத்தில் பணக்காரர்களான ஹிந்துக்கள் பலர் காங்கிரஸை ஆதரித்து பணம் தந்து உதவி வந்ததை அவர்களால் மறக்கவும் முடியவில்லை. லீகுக்கு உதவி வந்த பணக்கார முஸ்லிம்களை விட இவர்களை எண்ணிக்கையில் மிக அதிகம். காங்கிரஸை ஒரு தர்ம சங்கடத்தில் ஆழ்த்தவே திட்டமிட்டு இந்த பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருப்பதாக வி. ஆர். எண்ணினார். மந்திரி சபைக் கூட்டத்தில் 'இது மதச்சார்புடைய பட்ஜெட்' என்று கூறியே தாக்கினார்.

மேன்மைமிகு மன்னரின் அரசு இப்போது சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த ஒரு காரியத்தைச் செய்தது. ''1948 ஜூன் மாதத்துக்கு முன்னதாகப் பொறுப்புள்ள இந்தியக் கரங்களில் பிரிட்டன், ஆட்சி அதிகாரங்களை ஒப்படைக்கும்'' என்று 1947 பிப்ரவரி 20 ஆம் தேதி அட்லி அறிவித்தார். அவர் மேலும் கூறினார்: ''மேன்மைமிகு மன்னரின் அரசு யாரிடம் ஆட்சி அதிகாரங்களை ஒப்படைப்பது என்பது பற்றி யோசிக்க வேண்டும். ஏதோ ஒரு மாதிரியான மத்திய அரசிடம் ஒட்டு மொத்தமாக ஒப்படைப்பதா அல்லது சில பகுதிகளை இப்போதுள்ள மாகாண அரசுகளிடம் ஒப்படைப்பதா அல்லது வேறு நியாயமான விதங்களில் இந்திய மக்களின் நலன் கருதிச் செயல்படுவதா என்பது பற்றி யோசிக்க வேண்டும்.''

சமஸ்தானங்களைப் பொறுத்த மட்டில் இந்த அதிகார மாற்றத்தையொட்டி பிரிட்டிஷ் மன்னரின் மேலாதிக்க உரிமை முடிவடையும். பிரிட்டனுக்குப் பதிலாகப் புதிதாகப் பொறுப்பேற்கும் அரசுகள், இந்த மேலாதிக்க உரிமையைப் பெறவோ, பிரயோகிக்கவோ முடியாது.

வேவல் விடைபெறுவதும் அவர் இடத்தில் லார்ட் லூயி மவுண்ட் பாட்டன் பதவி ஏற்பதும் நிச்சயமாயிற்று.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

# சுவாதி ஃபைனான்சியர்ஸ்

கவர்ச்சிகரமான வட்டி விகிதம்!

# 27%

| 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|---|
| 15% | 17% | 18% | 19% | 22% |

வழக்கமான வட்டி விகிதங்களின் மேல் **3%** கூடுதல் வட்டி அளிக்கப்படுகிறது

(குறைந்தபட்சம் ரூ 1000/-ம் அதன் மடங்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்)

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி பெற கூடுதல் போனஸ் 1% | 22% + 3% + 1% = 26%

வருடத்திற்கு ஒரு முறை வட்டி பெற கூடுதல் போனஸ் 2% | 22% + 3% + 2% = 27%

காமதேனு டெபாசிட் திட்டம்: இத்திட்டத்தின் மூலம் உங்களது முதலீடு 48 மாதங்களில் இரு மடங்காகிறது. அதாவது ரூ 5000/- ரூ 10000/- ஆகிறது.

பேங்க் கியாரண்டி பிக்சட் டெபாசிட்களும் ஏற்றுக்கொள்ளப்படும்.

**சிறப்பு அன்பளிப்புகள்**

| முதலீடு | வருடம் | சிறப்புப் பரிசு |
|---|---|---|
| ரூ 20000/- | 5 | 1 சவரன் தங்க மோதிரம் |
| ரூ 10000/- | 5 | ½ சவரன் தங்க மோதிரம் |
| ரூ 10000/- | 2 | ½ சவரன் தங்க மோதிரம் |
| ரூ 5000/- | 2 | 1 அழகிய வெள்ளி குத்துவிளக்கு |

குறிப்பு:
வாடிக்கையாளர்கள் மற்றும் பொது மக்கள் வேண்டு கோளுக்கிணங்கி கூடுதல் வட்டியும், சிறப்பு பரிசுகளும், 30.11.1986 தேதிவரை நீடிக்கப் பட்டுள்ளது. இந்த பொன்னான வாய்பயை பயன் படுத்தி கொள்ளும்படி கேட்டு கொள்கிறோம்.

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி,

**சுவாதி ஃபைனான்சியர்ஸ்**

பதிவு அலுவலகம்: 75, ரங்கநாதன் தெரு (முதல் மாடி)
உஸ்மான் ரோடு, எம்.எஸ். காம்ப்ளக்ஸ், தி. நகர்,
சென்னை-600 017. PP 443827

சுவாதி — உங்களது வெற்றிக்கு துணைவன்

# வாழ்க்கை வாழ்வதற்கே!



## வாழ – வாழ விடு!

**வா**ழ்க்கை வாழ்வதற்கே' என்ற தலைப்பே சுயநலமாகத் தொனிக்கிறது" என்று தம் கடிதத்தைத் தொடங்குகிறார் அந்தியூர். மு. தவசியப்பன். "வாழ்க்கை வாழ்வதற்கே, பணம் பண்ணுவதற்கே, இயற்கையை அனுபவிப்பதற்கே, கலைகளை ரசிப்பதற்கே, குடும்பத்தினருடன் இனிமையாகப் பொழுது போக்குவதற்கே, ஆரோக்கியம் காப்பதற்கே என்பதெல்லாம் சரிதான்; ஆட்சேபிக்கவில்லை. ஆனால், 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்பதை விட முக்கியம், 'வாழு, வாழவிடு' என்ற கொள்கைதான்" என்று கூறும் தவசியப்பன் தொடர்ந்து எழுதுகிறார்:

"பஸ் ஏறுகிறோம்; புகை பிடிக்காதீர் என்று போர்டு எழுதி வைத்திருக்கிறது; ஆனால் பஸ் முழுக்கப் புகை மண்டலமாக இருக்கிறது. சினிமா பார்க்க ஏ.ஸி. தியேட்டருக்குப் போகிறோம்; படம் தொடங்கியதும் நம் கவனமெல்லாம் சினிமாவில் என்று உணர்ந்து ஏ.ஸி.யை நிறுத்தி விடுகிறார்கள்! கோயிலுக்குப் போகிறோம்; கோயில் மதிலைச் சுற்றி ஒரே அசிங்கம்; துர்நாற்றம்! வெற்றிலைப் பாக்கு புகையிலைக் குதப்பி 'புளிச்' சென்று கண்டகண்ட இடத்தில் துப்புகிறவர்களைப் பற்றிச் சொல்லவே அருவருப்பாயிருக்கிறது; சற்று ஏமாந்தால் சாயத் துளிகள் நம் மீது! வீட்டிலுள்ள குப்பையை வாரிச் சற்று தூரம் நடந்து போய்க் குப்பைத் தொட்டியில் போட அலுப்பு; வீதியோரம் கொட்ட, அது சாலையெல்லாம் சிதறுகிறது! வேட்பாளர் யார்? கட்சிக் கொள்கை என்ன? என்று யோசிக்கக் கூடச் சோம்பல்; ஹீரோ பக்தியில் கண்மூடித்தனமாக வோட்டுப் போடுகிறோம். இன்னும் எத்தனையோ. பொறுப்பற்றவர்களால் வீடு மட்டுமல்ல, நாடும் கெடுகிறது. வாழ்ந்து, வாழ விடும்போதுதான் 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்பது அர்த்தமுள்ளதாகிறது!"

ஹேட்ஸ் ஆஃப் டு தவசியப்பன். அருமையான கருத்தை முழுமையாக வரவேற்கிறேன். அதோடு இன்னும் ஓரிரு விஷயங்களையும் கூற வேண்டும். ஒரு நிமிஷம் கூட வீணாக்காது எதையாவது உபயோகமாகச் செய்து கொண்டிருக்க வேண்டும் என்பது அதில் ஒன்று. "நான் படிப்பதை, சிந்திப்பதை, எழுதுவதை நிறுத்தினால் உடனே கிழவனாகி விடுவேன்!" என்றார் ராஜாஜி. அப்போது அவருக்கு வயது 94! ஓய்வு எடுத்துக் கொள்வதைக் கூட சிரத்தையுடன் செய்தவர் அவர். நண்பர்களுடன் அளவளாவுவதைக் கூடப் பயனுள்ள பொழுதாக்கினார்.

சோம்பல் மனத்துக்குள் சைத்தான் புகுந்து கொள்கிறது. மேலே மேலே கடமைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்யும் போது வீணடிக்க நேரமில்லை. வீணடிக்க நேரமில்லாதபோது குடிக்கலாமா, பங்கடிக்கலாமா என்று மனம் பலவீனப்படுவது சாத்தியமில்லை. பணத்தையும் பறித்து, உடலையும் கெடுக்கும் போலியான மகிழ்ச்சியை உள்ளம் நாடாது. உண்மையான மகிழ்ச்சி எது? கடமைகளைச் செவ்வனே செய்து கொண்டிருப்பதுதான். அதுவும் பலனை எதிர்பாராமல் செய்யக் கற்றுக் கொண்டு விட்டால் மனநிம்மதியும் மனநிறைவும் ஒரே சமயத்தில் கிடைத்து விடுகிறது. "பிள்ளையாரப்பா! என் கடமைகளை வஞ்சனையின்றி செய்து முடித்து விட்டேன். என் உழைப்பை உன் பாதங்களில் சமர்ப்பிக்கிறேன். பலன் தருவதும் தராததும் உன் பொறுப்பு" என்று அவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு ஓய்வாக இருக்க முடிகிறது.

"'கடமையைச் செய், பலனை எதிர்பாராதே' என்ற கீதா தத்துவத்துக்கு இணையாக மனச்சாந்தி அளிக்கும் விஷயம் உலகில் வேறு எதுவுமே இல்லை" என்று ஏராளமான நூல்களைக் கரைத்துக் குடித்துப் பல டாக்டர் பட்டங்களைப் பெற்றுள்ள இன்றைய நவீன மனோதத்துவ நிபுணர்கள் தலையிலடித்துச் சத்தியம் பண்ணத் தயாராயிருக்கிறார்கள்!

— ஜீவன்



# யார் வீட்டு ரோஜா?

"நண்பர்கள் திலீபும், தங்கராஜுவும் கல்யாணம் பண்ணிக் கொண்டு படும் அவஸ்தையைப் பார்த்துவிட்டு, பணக்கார விஜய் கல்யாணமே செய்து கொள்ள மாட்டேன் என்கிறான். அப்பா. சபாபதி. சொத்தை எல்லாம் தர்ம காரியங்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொடுத்துவிட்டு, ரசீதை மட்டும் அவனுக்கு அனுப்பி வைக்கிறார் — கல்யாணம் பண்ணிக் கொள்ளவில்லை என்றால் மீதியும் இப்படித்தான் போகும் என்று கோடி காட்ட...

சேரிப் பெண்ணான ராக்கியம்மாளைப் பிடித்து, அவள் அண்ணனைச் சரிக்கட்டி, "நீ விஜய் பெண்டாட்டியாகக் கொஞ்சம் நடி!" என்கிறார்கள் நண்பர்கள். அப்போதுதான் அப்பா வெறுப்படைந்து பணம் கொடுத்து விரட்டி விடுவார் என்கிறார்கள். நடிக்க வந்தவள் பணத்தை வாங்கிக் கொண்டு போகாமல் நிரந்தரமாகத் தங்கிவிடுவேன் என்கிற போதுதான் விஜய்க்குப் பிரச்னை முளைக்கிறது! போகப் போக, ராக்கியம்மாள்தான் ரேகா என்றும், அவள் அண்ணன் சாமிக்கண்ணுதான் கிரிமினல் லாயர் சாமிநாதன் என்பதும் தெரிந்து போய், விஜய் அவளை ஏற்றுக் கொள்வதோடு நாடகம் முடிந்திருந்தால், நாடகாசிரியரை முழுசாகப் பாராட்ட முடிந்திருக்காது. கடைசி காட்சியில்புதிர் கலகலப்பாகவிடுவிக்கப்படும்திருப்பம் இருக்கிறதே, அதுதான் நாடகத்தின் பலம். பாராட்டு அதற்குத்தான்.

குட்டி பத்மினி, ஐ. எஸ். ஆர்., டைப்பிஸ்ட் கோபு தவிர, கண்ணன், பங்க, ராம்கி எல்லோருமே அளவுக்கு மீறாமல் கச்சிதமாக நடித்திருக்கிறார்கள்.

மிதமான நகைச்சுவையை ஒழுங்கான ஒரு கதை அமைப்பில் கலந்து வழங்கியிருப்பதற்கு ரமணியைப் பாராட்ட வேண்டும்.

---

கொஞ்சம் மாடிப்படி மாது; கொஞ்சம் சொல்லத்தான் நினைக்கிறேன் — என்று வெங்கட் பின்னியிருக்கும் இந்த நாடக வலையில் சிக்கலும் முடிச்சும் ஆங்காங்கே விழுந்து புது மெருகு அளிக்கிறது.

வேலையில்லாப் பட்டதாரி ரமேஷின் தாழ்வு மனப்பான்மையை விரட்டி, அவனுக்கு உயர்ந்த வேலை கிடைக்கக் காரணமான பக்கத்து வீட்டுக் கவிதாவை அவனால் காதலிக்க மட்டுமே முடிகிறது. அவளிடம் சொல்ல முடியாதபடி சந்தர்ப்பங்களின் சதி. கவிதாவின் நிலையும் அதேதான். கடைசியில் அவள் யாரையோ கல்யாணம் பண்ணிக் கொள்ள, அதற்கும் முழுக்க முழுக்க ரமேஷே ஓடி ஓடி வேலை செய்து, அவர்களை ஹனிமூனுக்கு அனுப்ப, (சோக இசைப் பின்னணியுடன்) நாடகம் முடிகிறது.

கம்பெனி எம். டி. யே ரமேஷுக்குக் காதல் பாடம் சொல்லித் தரும் இடத்தில் கொஞ்சம் கலகலப்பு. கணேஷ் நேர்த்தியாகச் செய்திருக்கிறார். பிரசன்னா ரமேஷாகவும் ஆனந்தி கவிதாவாகவும் கொஞ்சம் நெகிழ வைக்கிறார்கள். நகைச்சுவை என்று அப்பட்டமாகக் கொடுக்காமல், ரமேஷ் தன் காதலை வெளிப்படுத்த முடியாமல் படும் அவஸ்தையையே அதிகம் பயன்படுத்திக் கொஞ்சம் சிரிப்பை வரவழைக்கப் பார்க்கிறார் வெங்கட்.

பிரசன்னா நடிக்கிறார் என்றாலே ஆங்கில வசனத்தை நிறையவே அள்ளித் தெளித்து விடுகிறார் வெங்கட். இதிலும் அதற்குக் குறைவில்லை.

— சாருகேசி

# வாயுள்ள ஊமைகள்



# இங்கு சுகாதார அதிகாரிகள் இருக்கிறார்களா; இல்லையா?

வட்டமேஜை

• கிராமங்களைக் கண்முன்னே கொண்டு வந்து காட்டுவதில் திரையுலகுக்கு ஒரு பாரதிராஜா என்றால், பத்திரிகையுலகுக்கு ஒரு 'கல்கி'யைக் கூறலாம். காமராஜர் மாவட்டத்தில் கல்கி — I கிராமத்துச் செய்திகள் 'ஃபைன்'.

குர்னிகால் சிங் பற்றிய கேள்விக்குத் தராகவின் பதில் A one.

திருச்சி — 3. ராஜேந்தர்பிரியன்.

• சராசரி மனிதனை அழகாகப் படம் பிடித்துக் காட்டியது 'ஒட்டங்களும் இலக்குகளும்' சிறுகதை.. முடிவு மனத்தை உருக வைத்துவிட்டது!

சாலிக்கிராமம், சம்பத்குமார்.

• தமிழ்நாட்டுக் கல்வி முறைகள் சகாராவாகிவிட்ட போது முதல் ராங்க் பெற்ற இளந்தளிரான ஸ்ரீநிவாஸ் வாடி வதங்காமல் வேறு என்ன செய்ய முடியும்? வேதனை சார்! வேதனை!

ஸ்ரீரங்கம், ஜி. பத்மா.

• வணிகவரித்துறை பட்டப் பகலில் அடிக்கும் கொள்ளையை அப்பட்டமாகப் படம் பிடித்துக் காட்டிய கல்கியின் துணிச்சலை மனம் திறந்து பாராட்டுகிறோம்!

சீர்காழி, தலைவை "யோகாதாசன்"

• டி. வி. சங்கரநாராயணனின் இசைத் திறமையைத் தங்களுடைய ஒவ்வொரு வரியும் திறம்பட எடுத்தியம்பியதைப் பார்த்ததும், நாமும் அவருடைய கச்சேரியை வாழ்க்கையில் ஒரு முறையாவது கேட்டு ரசிக்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது.

நாட்டரசன்கோட்டை, கல்கிப்ரியன்.

• அளவுக்கு அதிகமான கண்டிப்பும், கட்டுப்பாடுகளும் எதிர்மாறான விளைவுகளையே ஏற்படுத்தும் என்னும் உண்மையை இயல்பாகவும், சிறப்பாகவும் எடுத்துக் காட்டியது 'ஒரு புதிய ஜனனம்' என்ற போட்டிக் கதை. அனுபவ எழுத்தாளரைப் போல எழுதியுள்ள அறிமுக எழுத்தாளருக்குப் பாராட்டுக்கள்!

திருநின்றவூர், வெ பாண்டுரங்கன்.

• முதல் ராங்க் எடுத்த அந்த மாணவனின் உணர்வுகளைக் கருகச் செய்யும் நிலையில் தமிழகக் கல்வி நிர்வாகம் தரம் தாழ்ந்து இருப்பது வேதனையைத் தருகிறது.

வல்லம், ஆர். மைதீன் பாட்சா.

• ஆவுடையாபுரம் ஜனங்களைப் பற்றிய கட்டுரையைப் படித்தவுடன் என்னையும் அறியாமல் அழுதுவிட்டேன். அரசியல்வாதிகளால், அரசால் அநாதையாக்கப்பட்ட அப்பாவி ஜனங்களையும், அவர்கள் சோகக் கதையையும் எண்ணிப் பார்க்கும் போது அரசின் கையாலாகாத் தனத்தை எண்ணி மனவேதனைப்பட மட்டுமே முடிகிறது.

செம்பனார்கோவில், ஆர். நாகராஜன்.

• டி. வி. சங்கரநாராயணனின் கச்சேரி பற்றிய விமர்சனக் கட்டுரை பழைய 'கர்நாடக'க் கட்டுரைகளை நினைவூட்டியது. டி. வி. எஸ். இன்றைய தலைசிறந்த பாடகர். ஏமாற்றத்தை என்றுமே அளிக்காத கலைஞர். இதேபோல் வாராவாரம் இசை பற்றிய விமர்சனங்களைப் பிரசுரிக்கக் கூடாதா?

தலையங்கமும், 'ஊழலில் கொழுக்கும்...' கட்டுரையும் படு சூடாக இருந்தன.

சென்னை — 14. க. ரா.

• எல்லோரிடத்திலும், சுயநலமும், ஒற்றுமையின்மையும், நாட்டுப் பற்று இன்மையும், துவேஷ மனப்பான்மையும் மலிந்துவிட்ட இந்தக் காலத்திலும், தேச சேவையைக் கௌரவமாகக் கருதி, வீட்டுக்கொருவரையாவது ராணுவத்திற்கு அனுப்பி வரும், பெருமாள் தேவன்பட்டி கிராம மக்களைக் கையெடுத்துக் கும்பிடலாம் போலிருக்கிறது!

சென்னை — 15. சைதை வி. முரளி.

• 'குடும்பக்கட்டுப்பாடு' அமுல்படுத்துவதில் மற்ற மாநிலங்களை விடத் தமிழகம் முன்னணியில் இருப்பதாகச் சொல்லிக் கொண்டால் போதுமா? இருக்கிற குழந்தைகள் பாதுகாக்கப்பட்ட குடிநீர் இல்லாமல் வாத நோய்களால் பாதிக்கப்படுகிறார்களே! இங்கு சுகாதார அதிகாரிகள் இருக்கிறார்களா? இல்லையா?

பண்ருட்டி, ப. நஸீர் ஹுசேன்.

• கட்சிக்காரர்களிடம் படாத பாடு பட்டு விட்டு, காமிராவை வாங்கிக் கொண்டு கம்முனு கம்பி நீட்டி விருப்பீர் என்று நினைத்த எனக்கு உமது துணிச்சல் ஆச்சர்யத்தைக் கொடுத்து விட்டது! படா ஆள் சார் நீ!

அரகண்டநல்லூர், ஆர். விஜி.

• தலையங்கம் கண்டேன். தங்களின் ஒவ்வொரு வார்த்தையும் தங்கம்தான்! உலகிலேயே மிகப் பெரிய ஜனநாயக நாடு என்று பெருமை பீற்றிக் கொள்ளும் நாம், அடிக்கடி இதுபோன்ற வன்முறைகள் நடந்து வருவதைப் பார்க்கையில், பழம் பெருமைக்குரிய தகுதியையும் மதிப்பையும் இழந்து விடுவோமோ என்று அச்சப்பட வேண்டியுள்ளது. பழம் பெருமையை மீட்கத் தாங்கள் கூறியதைப் போல் புரட்சிகரமான சமுதாய மாற்றம் அவசியம் தேவையே!

சிங்காரப்பேட்டை, என். சங்கர்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).

Assistant Editor P. S. Mani. Editor: K. Rajendran.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# தனிச்சிறப்பிலே ஒரு தனி ஆர்வம்!



திருமதி சாருமதி ராமச்சந்திரன், இசைக் கலைஞர், சென்னை.

இசையின் நுணுக்கங்களறிந்து பிசகின்றிப் பாடும் திறன். சுவைகுன்றாது ராகங்களைப் பாடி அவையோரை வசப்படுத்தும் ஆர்வம். எதிலுமே ஒரு தனிச்சிறப்பு!

அதே தனிச்சிறப்பை இவர் அணியும் பட்டுப்புடவைகளிலும் காணலாம். இதுபற்றிக் கேட்டபொழுது அவர் கூறினார்:

《இசைக் கலைக்குச் சிறப்பூட்டுபவை ச்ருதிசுத்தம், ராக பாவம், தாளக்கட்டு. அதுபோன்றே பட்டுப் புடவைகளுக்குச் சிறப்பூட்டுபவை வண்ணம், நெசவு நயம், டிசைன். இவற்றுக்காகவே நான் லக்ஷ்மி சில்க் ஹவுஸிலிருந்தே என் பட்டுப் புடவைகளைத் தேர்ந்தெடுக்கிறேன்》

எதிலுமே தனிச்சிறப்பைக் காண்பது ஒரு கலையல்லவா?



**லக்ஷ்மி சில்க் ஹவுஸ்**

பனகல் பார்க் எதிரே, மாடியிலே,
தி. நகர், சென்னை 600 017.

*இவ்விடமும் ஷோ-ரூம் உள்ளது: லக்ஷ்மி சில்க் ஹவுஸ், மாதுங்கா (மத்திய ரயில்வே), பம்பாய்-400 019.*

market movers/LSH/818/86